# அந்நூறுல் முகம்மதியின் இரகசியம்

உருது மூலம்: அல்லாமா, முப்தி, அஹ்மத் யார்கான் றஹ்மத்துள்ளாஹி அலைஹி

தமிழில்: மௌலவி, பாஸில், ஏ.எல். பதுறுத்தீன் ஷர்க்கி பரேலவி ஸூபி காதிரி. நக்ஷபந்தி.

**இந்நூலை ஆரம்பிகும் முன், சில விதிகளை கவனத்தில் கொள்ள வேண்டும்.**

1) நூர் என்பதற்கான அகராதிப் பொருள், ஒளி, வெளிச்சம்,பிரகாசம், ஆகும். சிலவேளை வெளிச்சம், பிரகாசத்திற்கும் 'நூர்' என்று கூறப்படும், இந்த பொருளில் தான் சூரியனை நூர் என்று கூறப்படுகின்றது, மின்சாரம், விளக்கு, மின்விளக்கு உள்ளிட்ட வைக்கும் நூர் அல்லது பிரகாசம் என்பதில் காரியத்தைக் கூறி காரணத்தை கருத்தில் கொள்ளப்படுகின்றது.

2) நூர் இருவிதத்தில் இருக்கும்,

(1) புலக்காட்சி ஒளி (2) புத்தி ரீதியான ஒளி

புலக்காட்சி ஒளி கண்ணால் பார்ப்பதன் மூலம் தெரிய வரும், உதாரனம், வெப்பம், சுடர், மின்சாரம் உள்ளிட்டவையின் பிரகாசம்.

புத்தியாலான ஒளியை புலனால் கிரகிக்க முடியாது, ஆனால், புத்தி இது ஒளி என்றும், பிரகாசம் என்றும் கூறும். இந்த அடிப்படையில்தான் இஸ்லாம், திருக்குர்ஆன், ஹிதாயத், அறிவு உள்ளிட்டவையை நூர் எனக்கூறப்படுகின்றது.

**திருமறை வசனங்களைக் கவனியுங்கள்.**

1- الله ولي الذين امنوا يخرجهم من الظلمت الى النور.

அல்லாஹ் முஃமின்களுக்கு உதவியாளன், அவர்களை இருளிலிருந்து ஒளியின் பக்கமாக வெளிப்படுத்துகின்றான். 2 : 257

இத்திருவசனத்தில் வழிகேட்டை இருள் என்றும், ஹிதாயத்தை ஒளி, பிரகாசம் என்றும் கூறப்பட்டுள்ளன.

2- وانزلنا اليكم نورا مبينا

இன்னும், நாம் உம்தரப்பில் பட்டவர்த்தனமான ஒளியை இறக்கி வைத்தோம். 4::174

**இதில் திருக்குர்ஆனை ஒளி என்று கூறப்பட்டுள்ளது.**

3- مثل نوره كمشكات فيها مصباح

றப்பின் ஒளிக்கு உதாரணம் விளக்கு இருக்கும் மாடத்தைப் போன்றுள்ளது. 24:35

**இத்திருவசனத்தில் றப்பு தனது தாத்தை , அல்லது, தனது ஹபீப் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்று கூறுகின்றான்.**

4- ومن كان ميتا فاحييناه وجعلنا له نورا يمشي به في الناس.

எனவே, அவன் மரணித்தவனாக இருந்தான், பின்னர், நாமே அவனை உயிருள்ளவனாக்கினோம், இன்னும், அவனுக்கு ஒளியைக் கொடுத்தோம், அதன்மூலம் மக்களிடத்தில் சென்றான்.6: 122

5- افمن شرح اللّٰه صدره للاسلام فهو على نور من ربه.

இஸ்லாத்திற்காக எவருடைய நெஞ்சை நாம் திறந்தோமோ அவர் றப்பின் தரப்பில் ஒளியிலிருக்கிறார். 39:22

6- ربنا اتمم لنا نورنا واغفر لنا

எங்களின் றப்பே !எங்களின் ஒளியை பூரணமாக்குவாயாக! இன்னும், எமக்கு மன்னிப்பை வழங்குவாயாக ! 66:8

7- انزلنا التوراة فيه هدي و نور

இன்னும், தௌறாத்தை நாம் இறக்கிவைத்தோம், அதில் ஹிதாயத்தும், இன்னும் ஒளியும் உண்டு. 5: 46

> “ இமாம் ஷாபிஈ றஹ்மத்துள்ளாஹிஅலைஹி கூறுகின்றார்கள்.
>
> فان العلم نور من اله -- وان النور لا يعطي لعاص
>
> **நிச்சயமாக அறிவு என்பது றப்பின் ஒளியாகும், இன்னும் ஒளி பாவிகளுக்குக் கிடைக்காது.** ”

(3) நூர் - ஒளி - என்பதற்கான வரைவிலக்கணம் தானும் வெளியாகி அடுத்தவற்றின் தாத்தையும் வெளியாக்கக்கூடியது. இது வெளியாகுவதும், வெளியாக்குவதும் இரு விதத்திலிருக்கின்றன.

சந்திரன், சூரியன், மின்சாரம், எரிவாய்வு உள்ளிட்டவை புலனில் வெளியாகி இன்னும் வெளியாக்கக்கூடியது. இன்னும், அறிவு, ஹிதாயத், இஸ்லாம், திருக்குர்ஆன் உள்ளிட்டவை புத்தியில் வெளியாகி அடுத்தவர்களுக்கு வெளியாக்கக்கூடியவை

(4) அல்லாஹுத்த ஆலா எதார்த்தத்தில் பூர்வீகமான, நித்தியமான சுயமான(தாத்தியான) ஒளியாகும், தன்னில் வெளியானவன், இன்னும், எதை அவன் வெளியாக்கினானோ அது வெளியாகிவிட்டது. ஏனையவையான சங்கையான நபிகள் நாயகம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லது திருக்குர்ஆன் ஷரீப், அல்லது இஸ்லாம் ,அல்லது மலக் உள்ளிட்ட யாவும் அல்லாஹ்வால் வழங்கப்படவை என்ற ரீதியில் றப்பின் ஆக்கத்தனால் ஒளியாகும், அவனேதான் அவற்றை ஒளியாக்கினான், அவை ஒளியாகிவிட்டன. எவ்வாறெனில்,

றப்புத்த ஆலா நித்தியம், பூர்வீகம் என்ற எதார்த்தனடிப்படையில் ஸமீஃ கேட்பவன், பஸீர் பார்ப்பவன், ஹய்யு, ஜீவனுள்ளவன் அலீம் அறிவுள்ளவன் கபீர் உள்ளார்ந்து அறிபவன் ஆகும்; ஏனைய படைப்புக்கள் அவனுடைய படைப்பால் வழங்கப்பட்ட பஸீர் பார்ப்பவர், ஸமீஃ கேட்பவர் அலீம் அறிவுள்ளவர், கபீர் உள்ளார்ந்து அறிபவர் ஆகும்.

தனக்காக கூறும் போது,

انه هو السميع البصير

நிச்சயமாக, றப்பு கேட்பவன், பார்ப்பவனாகும்.

இத்திருவசனத்தில் றப்பு தனக்குத்தானே கேட்பவன், பார்ப்பவன் என்கின்றான், மற்றுமொரு திருவசனத்தில் மனிதனின் விடயத்தில் இவ்வாறு கூறுகின்றான்.

انا خلقنا الانسان من نطفة امشاج نبتليه فجعلناه سميا بصيرا

நிச்சயமாக கலந்த இந்திரியத்திலிருந்து மனிதனைப் படைத்தோம், அவன் அவனை சோதிப்பான், எனவே, அவனைக் கேட்பவனாகவும், பார்க்கின்றவனாகவும் ஆக்கினான். 76:2

இவ்வாறுதான் ஏனைய அனைத்து பண்புகளின் நிலையும் உள்ளன. றப்புத் தஆலா எவராலும் வழங்கடாத சுயமான பண்புள்ளவன், இன்னும், ஏனைய படைப்புக்கள் றப்புத்த ஆலாவின் ஆக்கத்தினால் வழங்கப்பட்ட தற்காலிக பண்புகளைப் பெற்றுள்ளன, சொல் பொதுவில் கூட்டானவை, ஆனால், பொருளில் பாரிய வேறுபாடு உண்டு.

அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 2

**(5) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் றப்பின் ஒளி என்பதன் பொருள், றப்பின் ஒளியின் ஒரு துண்டுஎன்றோ, அல்லது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளிக்கு றப்பின் ஒளி மூலம் என்றோ அல்லது, அன்னாரின் ஒளி றப்பின் ஒளியைப் போன்று நித்தியமானது, சுயமானது என்றோ, றப்பின் ஒளி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களில் இரண்டறக் கலந்துள்ளது என்பதோ பொருளல்ல, இவ்வாறு பொருள் கொள்வது ஷிர்க்கையும், குப்றையும் நிச்சயப்படுத்தும்.**

**ஆயினும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எவ்வித இடைதுணையின்றி றப்பிடமிருந்து அருளைப் பெற்றுக் கொள்கின்றார்கள், இன்னும், ஏனைய அனைத்து படைப்புக்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து அருளைப் பெற்றுக் கொள்கின்றன என்பது தான் இதன் பொருளாகும்.**

**எடுத்துகாட்டு, ஒரு விளக்கிலிருந்து அடுத்த விளக்கு தீபமாகி பின் அடுத்ததிலிருந்து ஆயிரமாயிரம் விளக்குகள் வெளிப்படுகின்றன, அல்லது ஒரு கண்ணாடியை சூரியனுக்கு எதிரே வைப்பதன் மூலம் அது பிரகாசிக்கின்றது, பின்னர் இருட்டிலிருக்கும் கண்ணாடிகளுக்கு எதிராக வைத்தால், அதன் பிம்பத்தால் அனைத்து கண்ணாடிகளும் ஜொலிக்கின்றன.**

**முதற் கண்ணாடியில் சூரியன் விடுதிவிடவில்லை, அது துண்டாகி கண்ணாடிக்குள் சங்கமாகவுமில்லை என்பது வெளிப்படை, முதற்கண்ணாடி எவ்வித ஊடகமுமில்லாமல் நேரில் சூரியனிடமிருந்து பிரகாசத்தைப் பெற்றுக் கொள்கின்றது, ஏனையவை அதிலிருந்து சுடரைப் பெறுவது மட்டும்தான் இங்கே நடந்துள்ளது, முதற்கண்ணாடி நடுவில் இருக்காவிட்டால், ஏனைய அனைத்து கண்ணாடிகளிலும் இருள் கப்பி இருட்டிலிருக்கும்.**

**இதற்கான உதாரணத்தை ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் விடயத்தில் றப்புத்த ஆலா கூறிய பின்வரும் திருவசனத்தை உற்றுக்கவனியுங்கள்.**

واذا سويته ونفخت فيه من روحي فقعوا له سجدين

**அதை நான் நிரப்பமாக்கி, அதில் எனது புனித றூஹை ஊதிய போது அதற்கு நீங்கள் சுஜூது செய்தவர்களாக விழ வேண்டும். 15 : 29**

**ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் விடயத்தில் கூறுகின்றான்.**

**وروح منه அவர் ஈஸா அலைஹிஸ்ஸலாம் றப்பின் றூஹில் நின்றுமுள்ளவர். 4 : 172**

எனவேதான் ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை 'றூஹுல்லாஹ்' என்று கூறப்படுகின்றது, ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம், ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் உள்ளிட்ட இருவரும் அல்லாஹ்வின் றூஹின் துண்டு என்றோ, அல்லது பகுதி என்றோ, அல்லது அல்லாஹ் அவர்களில் சங்கமாகியுள்ளான் என்பதோ பொருளல்ல, எனினும், தாயும் தந்தையுமில்லாமல், அல்லது தந்தையின் தொடர்பில்லாமல் அவர்களுக்கு றப்பு றூஹை வழங்கினான் என்பதுதான் இதன் பொருளாகும். இவ்வாறுதான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளி றப்பின் ஒளியிலிலுள்ளது என்பதற்கான பொருளுமாகும், அதாவது, படைப்பின் துணையின்றி றப்பிடமிருந்து நேரடியாக அருளைப்பெறுகின்றார்கள்.

( 6 ) 1) முஹம்மதிய மனித கோலம். 2) ஹகீகது முஹம்மதியா.

முஹம்மதியாவின் மனித கோலம் என்பது, ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிச்சளத்தில் பீவி ஆமீனா நாயகி மூலம் பிறந்த பரிசுத்த திருமேனிக்குரிய திருநாமமாகும்,

அனைத்து நபிமார்களுக்கும் பின், உலகத்தில் உதித்து இந்த உலகத்தில் அனைத்து உறவுகளோடும் நல்லுறவாடினார்கள். பீவி காத்தூன் ஆமினா நாயகியின் கண்ணின் ஒளியானதும், ஹளறத் ஆயிஷா ஸித்தீக்காவின் சிரசின் கீரிடமானதும், ஹளறத் இப்பாஹீம், இன்னும் தைய்யிப், தாஹிர், பாத்திமத்துஸ் ஸஹ்றா றழியல்லாஹு அன்ஹும் வ அன்ஹா உள்ளிட்டோருக்கு தந்தையானதும், மற்றும் அனைத்து உறவுகளுக்கும் அச்சாணியானதும் இந்த முஹம்மதியாவின் திருக்கோலத்தின் பண்புகளாகும்.

ஹகீகத்தே முஹம்மதிய்யா என்பது, ஸூபியாக்களின் பரிபாஷையில் பொதுமையான தாத்திற்கு முன்னுள்ள முதற் குறிப்புக்கான பெயராகும், ஒப்பில்லாமல் இவ்வாறு புரிந்து கொள்ளுங்கள், வினையடிச் சொல்லு(مصدر)க்கு முன்னுள்ள முதற் குறிப்பு வினையடிச்சொல்லிலிருந்து வந்த பொதுவான (ماضي مطلق) இறந்தகாலமாகும், இன்னும், ஏனைய அனைத்து வாய்ப்பாட்டுப் பெருக்கலுக்குப் பின்வரும் அனைத்துக்குமான குறிப்பு றப்புத்த ஆலா என்ற مصدر வினையடியின் தஜல்லியாத்துக்களாகும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் றப்பின் முதல் தஜல்லியாகிய ماضي مطلق பொதுமையான இறந்த காலமாகும், ஏனைய படைப்புக்களுக்குப் பின்னுள்ளவை தஜல்லியாத்துக்களின் مظهر வெளிப்பாடாகும்.

முஹம்மதியாவின் திருக்கோலம் பற்றி

قل انما انا بشر مثلكم

**கூறுங்கள்! நான் உங்களைப் போன்ற மனிதன்.**

**இன்னும், ஹகீகத்துல் முஹம்மதியாயாவைப்பற்றி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வாறு கூறினார்கள்,**

كنت نبيا وادم بين الماء والطين

**ஆதம் மண்ணுக்கும், தண்ணீருக்கும் மத்தியில் இருக்கின்ற வேளை நாம் நபியாக இருக்கின்றோம்.**

**ஹகீகத்தே முஹம்மதிய்யா என்பது, ஆதத்தின் மக்களைச் சார்ந்ததில்லை, இன்னும் மனிதத்துவத்தைச் சார்ந்ததுமில்லை, இன்னும், உங்களைப் போன்றவர் என்பதை ஒத்ததுமல்ல, எவருக்கும் தந்தையாகவுமில், எவருக்குமான பிள்ளையாகவுமில்ல; எனினும் அனைத்து உலகத்திற்குமான வேராகும்.**

**மனிதத்துவ (بشري) த்தின் ஆரம்பம் ஆதம் அலைஹிஸ் ஸலாம் அவர்களிலிருந்து தொடங்குகிறது, ஹளறத் ஆதம் அலைஹிஸ் ஸலாமவர்களின் படைப்பின் ஆரம்பம் தயாராகுவதற்கு முன்பே றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நபியாக இருக்கின்றார்கள், இந்த நேரத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மனிதராக இருந்திருந்தால், ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மனிதர்களின் தந்தையாக எப்படி ஆனார்கள்?**

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 3

**நபி என்பவர் ஷரீஅத்தின் சட்டங்களை எத்திவைப்பதற்காக அனுப்பி வைக்கப்படும் மனிதர் என்று நபிக்கு வரைவிலக்கணம் கூறப்படுகின்றது, இந்த வரைவிலக்கணம் மனித நிலையிலிருக்கும் நபிக்கான வரைவிலக்கணம் தவிர, ஹகீகத்துன் நபிக்கான வரைவிலக்கணமல்ல, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மனிதனின் அடையாளமே இல்லாத காலத்தில் நபியாக இருந்துள்ளார்கள், ஏனெனில் இந்த நேரத்தில் முதல் மனிதரும் அனைத்து மனிதர்களின் தந்தையுமாகிய ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பிறக்கவே இல்லையே! மனிதன் வாழுவதற்கான இடமோ, மனிதனுக்குத் தேவையான அடிப்படை வசதிகளோ அப்போது ஏற்படுத்தப்பட்டிருக்கவேயில்லை, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நுபுவ்வத், இடமோ, அதில்வாழும் இனமோ இல்லாத காலத்திற்கு முற்பட்டதாகும்.**

**பாதாமின் ஓடும் அதன் பருப்பும் பாதாமின் பெயரால்தான் அழைக்கப்படும்,, அதன் வெளிப்பகுதி தொலி, அல்லது ஓட்டின் சட்டங்கள் வேறு,!, அதன் பருப்பின் சட்டங்கள் வேறு! பின்னர், ஓட்டுக்குள் பருப்புமிருக்கும், இவ்வாறுதான்**

ஹகீகத்துல் முஹம்மதிய்யா முஹம்மதிய்யாவின்மனித கோலத்தில் வெளிவந்துள்ளது,

நூராக இருப்பதும், புர்ஹான் -அத்தாட்சி-ஆக இருப்பதும், றப்புக்கான ஆதாரமாக இருப்பதும் அந்த ஹகீகத்தே முஹம்மதியா மற்றும் அதற்குரிய பண்புகளாகும். இந்த உள்ளடக்கத்தை மௌலானா ஜலாலுத்தீன் றூமி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் மஸ்னவி ஷரீபில் மிகச்சிறப்பாக விரித்தும், விளக்கியும் கூறியுள்ளார்கள், மேலும் மௌலவி அஷ்ரப் அலி தானவியும் கூட' நஷ்றுத் தீபி' என்ற நூலில் சிறந்த விதத்தில் நிரூபித்துள்ளார்,

தப்ஸீர் றூஹுல் பயானில்,

هو الذي خلقكم من نفس واحدة

அவன் உங்களை ஓரே ஒரு நப்ஸிலிருந்து படைத்தான் 7: 189

என்ற திருவசனத்தின் விளக்கத்தில் "அனைத்து றூஹுகளும் முஹம்மதியாவான றூஹிலிருந்துதான் படைக்கப்பட்டன" என்று கூறியுள்ளார்கள். ஆகவே, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் 'அபுல் அர்வாஹ்' றூஹுகளின் தந்தையாவார்கள்.

(7) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சிறப்பான திருமேனியின் நூறானிய்யத் புலக்காட்சியாகவும் இருந்துள்ளது,

சங்கையான ஸஹாபாக்களும், மற்றும் அம்மணிகளான உம்முஹாத்துல் முஃமின்களும் அந்த பேரொளியை தங்களின் கண்களால் கண்டுள்ளார்கள், இமாம் திர்மிதி றஹ்மத்துள்ளாஹி அலைஹி தங்களின் ஷமாயிலுத் திர்மிதியில் ஹிந்து இப்னு அபீஹாலா றழியல்லாஹு அன்ஹு மூலம் நீண்ட ஒரு ஹதீதைப் பதிவு செய்துள்ளார்கள், அதில்

كان رسول الله صلى الله عليه وسلم فخما يتلألأ وجهه كتلألأ القمر ليلة البدر

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் மகத்துவமிக்க கீர்த்தி மிக்கவர்களாக இருந்தார்கள், அன்னாரின் மதி வதனம் பதினான்காம் நாள் முழுமதி போன்று ஜொலித்துக்கொண்டிருக்கும்.

ஹளறத் தாரமி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி ஹளறத் றபீஃ பின்து முஅவ்வித் ஸப்றாஃ றழியல்லாஹு அன்ஹா மூலம் அறிவிக்கின்றார்கள்.

قالت يا بني لو رايته رايت الشمس طالعة

எனது செல்ல மகளே! நீர் மஹ்பூப் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப்பார்த்தீராயின், சூரியன் உதித்திருப்பதைக் காண்பாய்!

இதே தாரமி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமாவிடமிருந்து அறிவிக்கின்றார்கள்.

كان رسول الله صلى الله عليه وسلم افلج الثنتين اذا تكلم رؤي كالنور يخرج من بين ثناياه

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாறக்கான முற்பற்களில் இடைவெளி இருந்தது அன்னார் பேசினால், அந்த இடைவெளிகளிலிருந்து ஒளி வெளிப்படும்..

சில அறிவிப்புக்களில், முபாறக்கான பல்லின் வெளிச்சத்தில் இருட்டில் கிடந்த தையல் ஊசியைத் தேடியதாக வந்துள்ளது .

سوزن گم شده ملتی هے تبسم سے تیرا

رات کوا صبح بناتاهے اوجالا تیرا

தங்களின் முறுவலிப்பினால் கிடைத்தது தொலைந்த ஊசி! தங்களின் பிரகாசம் இரவை விடியல் வைகறையாக்கியதே!

திர்மிதி, அஹ்மத், பைஹகீ, இப்னு ஹிப்பான் உள்ளிட்டோர் ஹளறத் அபூஹுறைறா றழியல்லாஹு அன்ஹு மூலம் அறிவிக்கின்றார்கள்.

كان الشمس تجري في وجهه

அன்னாரின் திரு முகத்தில் சூரியன் பிரகாசிப்பது போன்று இருக்கும்.

மவாஹிபுல்லதுன்னியா பாகம் 1 பக்கம் 251 ல் நிஹாயா ஷரீப் என்ற நூலிலிருந்து நக்லு செய்கின்றார்கள்.

وكان الجدار تلاحك وجهه

அன்னாரின் திருவதனத்தில் சுவரின் பிரதிபிப்பம் பார்வையில் படக்கூடியதாக இருந்தது.

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி தங்களுடைய மதாரிஜுன் நுபுவ்வத்தில் எழுதுகின்றார்கள்

ونومی اد فتاد آں حضرت را سا یہ بر زمین

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களுடைய நிழல் நிலத்தில் படிவதில்லை.

மேற்கண்டட அனைத்து மேற்கோள்களிலிருந்தும் நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித திருமேனியின் நூறானிய்யத்தை ஸஹாபாக்கள் கிரகித்திருக்கின்றார்கள் என்பது புரிகின்றது. ஆகவேதான் அண்ணலம் பெருமானார் றஸூலேகரீம் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லமவர்களின் மதிவதனத்தை சூரியன் சந்திரனுக்கு ஒப்பிட்டுப் புரியவைத்தார்கள்.

இவ்வாறுதான் அன்னாரின் திருமேனிக்கு நிழல் இல்லாதிருப்பதும், பரிசுத்தத் திருமேனியிலிருந்து நறுமணம் வெளிப்படுவதும், தெருக்களிலிலும், முடுக்குகளிலும் நறுமணம் கமழ்வது உள்ளிட்ட யாவும் நூறானியத்தின் தாக்கத்தினால் நிகழ்வதாகும்.

மிஃறாஜ் ஷரீபில் அக்கினி, குளிர் மண்டலங்களைத்தாண்டிச் சென்ற போதும் அன்னாரில் எவ்வாத மாற்றமும் ஏற்படவில்லை, காற்று மண்டமில்லாத ஆகாயத்தில் பயணம் செய்தும், உயிரோடு இருந்தது உள்ளிட்ட அனைத்தும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒளி என்பதனால் தான் சாத்தியமானது .

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளி புலக்காட்சிக்கும், புத்திக்கும் உட்பட்டதாகும்.

இவ்வாறே முபாறக்கான நெஞ்சைப்பிளந்து இதயத்தை வெளியாக்கி மலக்குகள் அதைக் கழுவிய போதும்கூட, அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உயிரோடுதானிருந்தார்கள், இதயத்தைப் பிளப்பது மரணத்தை ஏற்படுத்தவல்லதாக இருந்தும் அன்னாரில் எவ்வித மாற்றமும் நிகழாததற்கு அன்னார் ஒளி என்பதுதான் காரணமாகும். இப்போதும் கூட சில வலிமார்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பேரொளியை தங்களின் புறக்ஙண்ணால் பார்க்கவே செய்கின்றார்கள், இதற்கு ஏராளமான முகாந்திரங்கள் இருக்கின்றன.

மேற்கண்ட விதிமுறைகளைக் கவனத்தில் வைத்துக் கொண்டால், ஏராளமான பிரயோசனங்கள் கிடைக்கும், மேலும்,இந்த அடிப்படைப்பிரச்சினையைப் புரிந்து கொள்வதும் சுலபமாகிவிடும்.

தற்காலத்தில் மறுப்பாளர்கள் மக்களைக் குழப்புவதற்கு கையாளும் வஞ்சனை யாதெனில், அல்லாஹ்வும் நூர் - ஒளி - றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் ஒளி - நூர் - என்றால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் றப்பாகி விடுவார்களே!. சில வேளை இப்படியும் கூறுவார்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் நூர் என்றால், அல்லாஹுத்த ஆலா றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களில் சங்கமாகிவிட்டானா? அல்லது அல்லாஹ்வின் நூர் துண்டாகி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தாத்தாகத் தயாராகிவிட்டதா?

சில நேரம் இப்படியும் கூறுவார்கள், கிறிஸ்த்தவர்கள் ஹளறத் ஈஸா அலைஹிஸ் ஸலாம் அவர்களை அல்லாஹ்வின் குமாரர் ஆக்கினார்கள், நீங்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை அல்லாஹ்வின் ஒளியாக்கியுள்ளீர்கள். குமாரனாக ஏற்பதும் ஒளி என்று கூறுவதும் ஒன்றுதான,

அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒளியாக இருந்தால், அன்னாரின் அனைத்து பிள்ளைகளும் ஒளியாகத்தானே இருக்க வேண்டும், எந்த ஒரு ஸெய்யிதும் மனிதனாக இருக்க முடியாதே! என்றெல்லாம் எடக்கு முடக்காகக் கூறுகின்றனர்.

நாம் முன்வைத்த விதிகளைக் கவனத்தில் இருத்திக் கொண்டால், அனைத்து குற்றச்சாட்டுக்களும் இருந்த இடம் தெரியாமல் ஒழிந்து போய்விடும்.

இந்த நூலில் இரு அத்தியாயங்ஙள் இடம் பெறும் .

1. வது அத்தியாயத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்வர்களின் ஒளியைப்பற்றியிருக்கும்
2. வது அத்தியாயத்தில், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் இல்லை என்ற விளக்கம் இடம் பெறும்.

அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 4




றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒளி என்பதற்கான முகாந்திரம்,

இந்த அத்தியாயத்தில் இரு பிரிவுகள் உள்ளன, முதற்பிரிவில் நூர் பற்றிய பிரச்சினைக்கான ஆதாரம்! இரண்டாவது பிரிவில் இப்பிரச்சினை தொடர்பான குற்றச்சாட்டுக்களும், தீர்வுகளும் இடம் பெறும்.

பிரிவு: 1

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் நூறாகும், இன்னும், அனைத்து படைப்புக்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளியிலிருந்து வந்தவை , இதுபற்றி திருக்குர்ஆனின் திருவசனங்கள், ஹதீது ஷரீபுகள், சன்மார்க்க அறிஞர்களின் கூற்றுக்கள், மற்றும் தேவ்பந்து வஹாபிகளின் கூற்றுக்களும் சாண்றுகளாக இருக்கின்றன,

ஆதாரங்களைக் கவனியுங்கள்!

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

1- قد جاءكم من الله نور وكتاب مبين.

நிச்சயமாக உங்களிடம் அல்லாஹ்வின் தரப்பிலிருந்து ஒளி வந்துள்ளது, இன்னும், தெளிவான வேதமும்.5: 15

2- مثل نوره كمشكوة فيها مصباح المصباح كالزجاجة والزجاجة كانها كوكب دري.

றப்பின் (அதாவது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின்) ஒளிக்கு உதாரணம், ஒரு விளக்கு இருக்கும் மாடத்தைப் போன்றாகும், அந்த விளக்கு பளிங்கு கோளத்திலிருக்கின்றது, அந்த விளக்கு முத்தாலான நட்சத்திரம் போன்றுள்ளது. 24: 35

முதல் திருவசனத்தில் நூர் என்பதன் கருத்து றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமாகும், வெளிச்சமில்லாமல் ஏட்டைப் படிக்க முடியாதது போன்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின்றி திருக்குர்ஆனைப் புரிந்து கொள்ள இயலாது.

அன்னார் றப்பின் ஒளியாகும், சூரியன், சந்திரன் இன்னும் இவையல்லாதவை போன்று எவராலும் அதை அணைக்க முடியாது, மேலும், அதனை கடல் நீரைப் போன்று அதன் அளவை எவராலும் கணிக்கவும் முடியாது

இரண்டாவது திருவசனத்திலும் நூர் என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையே குறிக்கும், ஏனெனில், றப்புக்கு ஒப்புமை கிடையாது,

ليس كمثله شيئ

அவனைப் போன்று எப்பொருளும் இல்லை

இங்கே அவனுடைய ஒளிக்கு ஒப்புமை வழங்கப்படுகின்றது, எனவே, அதன் நோக்கம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமாகும்.

3- يا ايها النبي انا ارسلناك شاهدا ومبشرا ونذيرا وداعيا الي الله باذنه سراجا منيرا .

நபியே! நிச்சயமாக உம்மை ஹாழிர் நாழிர் (சாட்சி பகராபவர்) ஆகவும், இன்னும், நற்செய்தி கூறுபவராகவும், இன்னும், எச்சரிப்பவராகவும், அல்லாஹ்வின பக்கம் அவன் கட்டளைப்படி அழைப்பவராகவும், இன்னும் பிரகாசிக்கும் சூரியனாகவும் அனுப்பிவைத்துள்ளோம். 33: 45

திருக்குர்ஆனில் மற்றுமொரு இடத்தில் சூரியனை ஸிறாஜன் முனீறா பிரகாசிக்கும் விளக்கு என்று கூறப்பட்டுள்ளது. ஏனெனில் அது பிரகாசிக்கின்றது இன்னும் பிரகாசிக்கச்செய்யவும் செய்கின்றது, மேலும், சந்திரன், நட்சத்திரங்கள் இன்னும், இவையல்லாத வையையும்

ஒளியாக்குகின்றது, இவையாவும் சூரியனால் தான் பிரகாசிக்கிறது, இன்னும், பிரகாசிக்கவும் செய்கின்றது.

இவ்வாறு தான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கும் கூட ஸிறாஜுன் முனீறா என்றே கூறப்பட்டுள்ளது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தன்னில் மிளிருகிறார்கள், இன்னும், ஸஹாபாக்கள் மற்றும் வலிமார்களை நூறாக ஆக்குகின்றார்கள், இவர்கள் யாவரும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களாலேயே ஒளிருகின்றார்கள் .

4- يريدون ليطفئوا نور الله بافواههم والله متم نوره ولو كره الكافرون.

காபிர்கள் அல்லாஹ்வின் நூரரை ( றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை) அணைக்க நாடுகிறார்கள், இன்னும், அல்லாஹ் தனது ஒளியை பூரணமாக்குகின்றான், காபிர்கள் வெறுத்தாலும் சரி 66: 8

5- يريدون ان يطفئوا نور الله بافواههم ويأبي الله ان يتم نوره.

காபிர்கள் அல்லாஹ்வின் ஒளியை (றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை) தங்களின் வாயால் அணைத்திட விரும்புகின்றார்கள், அல்லாஹ் தன்னுடைய ஒளியை அணைப்பதை ஏற்கவில்லை. 9- 32

பிந்திய இத்திருவசனங்களில் வரும் நூர் என்பது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக்குறிக்கும்,

றப்புத்த ஆலா றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒவ்வொரு கருமங்களையும் பூரணப்படுத்தினான், அல்லாஹ்வின் ஒளி என்பதன் நோக்கம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித கல்புக்கான ஒளி என்று அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி தங்களுடைய மௌழூஆத்துல் கபீர் என்ற நூலில் குறிப்பிடுகின்றார்கள்.

மலரும்.....

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 5

முபஸ்ஸிரீன்களின் கூற்றுக்கள்.

1- தப்ஸீர் ஜலாலைனில் இல ,

1- لقد جاءكم من الله نور وكتب مبين

என்ற திருவசனத்திற்கு

هو نور النبي صلى الله عليه وسلم.

நூர் என்பது, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் குறிக்கும்.

2 - தப்ஸீர் ஸாவியில் இத்திருவசனத்திற்குக்கீழ் எழுதுகின்றார்கள்.

قوله هو النبي اي سمي نور لانه ينور البصائر ويهديها الرشاد ولانه اصل كل نور حسي معنوي.

றப்புத் த ஆலா இத்திருவசனத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்பதற்கான காரணம், அன்னார் அகக்கண்களை ஒளியாக்கின்றார்கள், இன்னும், வெற்றியின் பக்கம் வழிகாட்டலைக் கொடுக்கின்றார்கள், மேலும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒவ்வொரு புலக்காட்சி, அகக்காட்சி உள்ளிட்ட அனைத்து ஒளிக்கும் மூல வேராக உள்ளார்கள்.

3- தப்ஸீர் காஸினில் எழுதுகின்றார்கள்.

قد جاءكم من الله نور يعني محمد صلى الله عليه وسلم انما سماه الله نورا لانه يهتدى به كما يهتي في الظلام بالنور

அல்லாஹ்விடமிருந்து ஓர் ஒளி திட்டமாக உங்களிடம் வந்துள்ளது. அதாவது, இத்திருவசனத்தில் நூர் என்பது, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் குறிக்கும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்பதற்கான காரணம், இருட்டில் வெளிச்சத்தால் வழிகாட்டலைப் பெற்றுக் கொள்வது போன்று, அன்னாரிடமிருந்து ஹிதாயத்தைப் பெற்றுக்கொள்ளப்படுகின்றது.

4- தப்ஸீர் பைழாவியில் வரைகின்றார்கள்

وقيل يريد بالنور محمد صلى الله عليه وسلم

நூர் என்பதன் நோக்கம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்பது முபஸ்ஸிரீன்களின் ஒரு கூற்றாகும்.

5- தப்ஸீர் மதாரிக்கில் எழுதுகின்றார்கள்.

او النور محمد صلى الله عليه وسلم لانه يهتدي به كما سمي سراجا

நூர் என்பது, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமாகும், ஏனெனில் றப்புத்த ஆலா அன்னாரை ஸிறாஜுன் என்று கூறியது போன்று அன்னாரிடமிருந்துதான் ஹிதாயத் கிடைக்கின்றது,

6- தப்ஸீர் இப்னு அப்பாஸில் எழுதுகின்றார்கள்.

قد جاءكم من الله نور رسول يعني محمد

திட்டமாக அல்லாஹ்விடமிருந்து உங்களிடம் ஒளி வந்துள்ளது , அதாவது , முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமாகும்.

7- தப்ஸீர் றூஹுல்பயான் ஷரீபில் எழுதுகின்றார்கள்.

وقيل المراد با لاول هو الرسول صلى الله عليه وسلم با لثاني القران.

முதலில் நூர் என்பது முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களாகும் , இன்னும் வேதம் என்பது திருக்குர்ஆனாகும்.

8- அதே தப்ஸீர் றூஹுல் பயானில் 3வது திருவசனமான سرجا منيرا என்பதற்குக்கீழ் எழுதுகின்றார்கள்,

هو الذي جعل الله له نورا فارسله الى الخلق

அல்லாஹுத்த ஆலா நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை ஒளியாக ஆக்கி அன்னாரை படைப்பின்பக்கம் அனுப்பியுள்ளான்.

9- தப்ஸீர் பைழாவியில் இத்திருவசனத்திற்குக் கீழ் எழுதுகின்றார்கள்,

ويقتبس من نوره انوار البصائر

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளியிலிருந்து அகக்கண்கள் ஒளியைப்பெற்றுக்கொள்கின்றன. இந்த விளக்கத்திற்கு நெருக்கமான விளக்கம் தப்ஸீர் காஸீன் உள்ளிட்ட ஏனைய தப்ஸீர்களிலும் காணப்படுகின்றது.

10- தப்ஸீர் காஸினில் ஆயத் இல, 2க்குரிய திருவசனத்திற்குக்கீழ் مثل نوره என்பதற்கான விளக்கத்தில் கூறுகின்றார்கள்.

وقيل قد اتى هذا الثمثيل للنور محمد صلى الله عليه وسلم قال ابن عباس لكعب الاخبار اخبرني من قوله تعالى مثل نوره كمشكوة فيها مصباح قال كعب هذا مثل ضربه الله تعالى نبيه صلى الله عليه وسلم فالمشكوة صدره وزجاجة قلبه والمصباح فيه النبوة توقد من شجرة مباركة هي شجرة النبوة يكاد نور محمد صلى الله عليه وسلم وامره يتبين للناس ولو لم يتكلم

இத்திருவசனத்தில் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு உதாரணம் கூறப்பட்டுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது, ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா ஹளறத் கஃபுல் அக்பார் றழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் مثل نوره என்ற திருவசனத்திற்கான விளக்கத்தைக் கேட்ட போது, அல்லாஹுத்த ஆலா இந்த உதாரணத்தை தனது நபிக்கு வழங்கியுள்ளான் என்று பகர்ந்தார்கள், எனவே, மாடம் என்பது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாறக்கான நெஞ்சு, பளிங்குக் கோளம் என்பது அன்னாரின் முபாறக்கான இதயம், அதிலுள்ள விளக்கு என்பது நுபுவ்வத் இன்னும், முபாறக்கான மரம் என்பது, நுபுவ்வத்தின் மரம், يرق என்பது நூரே முஹம்மதி பிரகாசித்தல், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் இது பற்றி விளக்கிக் கூறாத போதும் கூட, மக்களுக்கு வெளிப்படையாகவே இருக்கின்றது.

**11- தப்ஸீர் றூஹுல் பயான் ஷரீபில் لقد جاءكم رسول என்ற திருவசனத்தின் விளக்கத்தில் பின்வரும் விடயத்தைக் குறிப்பிடுகின்றார்கள்,**

ஒருவிடுத்தம் றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் உங்களின் வயது எத்தனை? என்று கேட்டார்கள், இதுபற்றி எனக்குத்தெரியாது, ஆனாலும், நான்காம் வானத்தில் ஒரு நட்சத்திரம் 70 ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறை பிரகாசிக்கும், அதை 72ஆயிரம் விடுத்தம் பார்த்துள்ளேன் என்றார்கள், ஜிப்ரீலே! றப்பின் மீது ஆணையாக! அந்த நட்சத்திரம் நாமேதான் என்று நபியவர்கள் நவின்றார்கள்,

றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூறை றப்புத்த ஆலா ஹளறத் ஆதம் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் முதுகந்தண்டில் அமானிதமாக வைத்தான்.

தப்ஸீர் றூஹுல் பயானின் இந்த சொற்றொடரின் மூலம் நூறுமுஹம்மதி ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு முன்பே படைக்கப்பட்டுள்ளது, அந்த நேரத்தில் வானமுமில்லை, பூமியும் கிடையாது சந்திரனுமில்லை, சூரியனுமில்லை, எதுவுமில்லை.,

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 6

### ஹதீது ஷரீபுகளின் சான்றுகள்.

றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூர் என்பதற்கு எண்ணற்ற ஹதீதுகள் உள்ளன, அவற்றிலிருந்து சுருக்கமாக சிலவற்றை முன்வைக்கின்றோம்.

1-அப்துர்றஸ்ஸாக் தன்னுடைய முஸ்னதில் ஹளறத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு மூலம் அறிவிக்கின்றார்கள்,

அல்லாஹ்வின் திருத்தூதரே! என்னுடைய தாயும், தந்தையும் தங்களுக்கு அற்பணமாகட்டும்! சகல வஸ்த்துக்களுக்கும் முன்னால் முதன்முதலில் அல்லாஹுத்த ஆலா எதைப்படைத்தான் ? என்று நான் கேட்டதற்கு, ஜாபிரே! சகல வஸ்த்துக்களுக்கும் முன்னால் அல்லாஹுத்த ஆலா தன்னுடைய ஒளியிலிருந்து உம்முடைய நபியின் ஒளியைத் தான் படைத்தான்,

பின், அந்த ஒளி அல்லாஹ்வின் சக்தியால் அல்லாஹ் விரும்பிய இடங்களில் சுற்றிக்கொண்டிருந்தது,அந்த நேரத்தில் லௌஹ், கலம், சொர்க்கம்,நரகம், மலக்கு, வானம், பூமி, சந்திரன், சூரியன், ஜின், மனிதன் உள்ளிட்ட எதுவுமிருக்கவில்லை; பின்னர், அல்லாஹுத்த ஆலா படைப்புக்களைப் படைக்க

நாடிய போது, அந்த ஒளியை நான்காகப் பங்கிட்டான், அதிலொரு பங்கிலிருந்து கலமையும் ,இரண்டாவதிலிருந்து லௌஹுல் மஹ்பூழையும், மூன்றாவது பங்கிலிருந்து அர்ஷையும் இன்னும் இவையல்லாததையும் படைத்தான் என்று கூறினார்கள்.

இந்த ஹதீது நீளமானது, இந்த ஹதீதை இமாம் பைஹகீ றஹ்மத்துள்ளாஹிஅலைஹி தங்களுடைய தலாயிலுன் நுபுவ்வத் என்ற நூலில் அறிவித்துள்ளார்கள், மிகப் பெரிய இமாம்களெல்லாம் இந்த ஹதீதின் ஸனதைப் பலமானது என்று கூறியுள்ளார்கள், இமாம் அஸ்கலானி மவாஹிபிலும், இமாம் இப்னு ஹஜர் மக்கி அப்ழலுல் குறாவிலும், அல்லாமா பாஸி மதாலிஉல் மஸர்ராத்திலும், அல்லாமா ஸர்க்கானி ஷறஹ் மவாஹிபிலும், அல்லாமா அப்துல் ஹக் முஹத்தித் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹிம் மதாரிஜுன் நுபுவ்வத்திலும் குறிப்பிட்டுள்ளார்கள்.

2- அஹ்மத், பௌஹகீ, ஹாக்கீம் உள்ளிட்டோர் ஸஹீஹான ஸனதோடு ஹளறத் இர்பாழ் இப்னு ஸாரியா றழியல்லாஹு அன்ஹு மூலம் அறிவிக்கின்றனர்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

நான் அல்லாஹுத்த ஆலாவின் சன்னிதானத்தில் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் றூஹுக்கும், உடலுக்குமிடையில் இருக்கும் போதே நான் காத்தமுன் நபியாக இருந்துள்ளேன்.

4- அஹ்காம் இப்னு கஹ்தான், ஹளறத் இமாம் ஸைனுலாப்தீன் றழியல்லாஹு அன்ஹு விடமிருந்தும் இவர்கள் தங்களின் தந்தை இமாம் ஹுஸைன் றழியல்லாஹு விடமிருந்தும் இவர்கள் தங்களின் தந்தை இமாம் அலி றழியல்லாஹு விடமிருந்தும் அறிவாக்கின்றனர்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் பிறப்பதற்கு 14000 ஆண்டுகளுக்கு முன்பே தங்களின் றப்பின் சமுகத்தில் நாம் ஒரு நூறாக இருந்துள்ளோம்.

5- அபூ ஸுஹைல் கஹ்தான் தன்னுடைய அமாலி என்ற நூலில் ஸஹ்லுப்னு ஹம்தானி மூலம் அறிவித்துள்ளார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கடைசி நபியாக அனுப்பட்டிருக்கும் போது அனைத்து நபிமார்களையும் முந்துவது எப்படி? என்று அபூஜஃபர் முஹம்மதுஇப்னு அலி (இமாம் பாகர்)றழியல்லாஹு அன்ஹுவிடம் கேட்டேன், ஹளறத் அதம் அலைஹிஸ்ஸலாமவர்களின் முதுகந்தண்டிலிருந்த அவர்களின் பிள்ளைகளை வாக்குறுதிக்குரிய தினத்தில் வெளியாக்கிய

நேரத்தில் முதன்முதலில் பலா - بلى - என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்தான் பதில் கூறினார்கள்.

6- ஹளறத் அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹு தங்களைப்புகழ்ந்து பாட அனுமதி தாருங்கள் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடத்தில் அனுமதி கேட்டதற்கு, நல்லது பாடுங்கள் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள், ஹளறத் அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹு புகழ்ந்து பல பாக்களைப் பாடினார்கள், அதில்பின்வரும் இரு பாசுரங்கள் இருந்தன,

وانت لما ولدت اشرقت الارض
وضاءت بنورك الافق

தாங்கள் பிறந்த நேரத்தில் தங்களின் பேரொளியால் பூமியும், தொடுவானமும் ஜொலித்ததே!

فنحن بذلك الضياء
وفي النور سبيل الرشاد تخترق

எனவே, நாங்கள் அந்த ஒளியில், பிரகாசத்திலுமிருந்தோம், மேலும், அதிலிருந்து ஹிதாயத்திற்குரிய வழியும் தீர்க்கமானமானது. இவ்வனைத்து அறிவிப்புக்களையும் மௌலவி அஷ்ரப் அலி தானவி தனது 'நஷ்றுத்தீபி' என்ற நூலில் மிகத்தெளிவாகவும் விளக்கத்தோடும் நக்லு செய்துள்ளார், இவ்வனைத்து அறிவிப்புக்களையும் மவாஹிபுல்லதுன்னியாஷரீபிலும் நக்லு செய்யப்பட்டுள்ளன,

7) மவாஹிபுல்லதுன்னியா பாகம் 1. பக்கம் 5ல் பின்வரும் விடயம் பதியப்பட்டுள்ளது.

இமாம் அபூ ஸ ஈது நைஷாப்பூரி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி ஹளறத் கஃபுல் அக்பார் றழியல்லாஹு அன்ஹு மூலம் அறிவிக்கின்றார்கள்,

நூறு முஹம்மதி அப்துல் முத்தலிப் றழியல்லாஹு அன்ஹு க்கு கிட்டியதும் அவர்களின் உடலிலிருந்து கஸ்தூரி வாசம் வந்தது, மேலும் நூறே முஹம்மதி அவர்களின் நெற்றியில் பிரகாசித்தது, அந்த நேரத்தில் அவர்கள் துஆக் கபூலாகக்கூடியவராக இருந்தார்கள், மக்காவாசிகள் அவர்களை முன்னிறுத்தி பஞ்ச காலத்தில் மழை வேண்டுவார்கள், உடனே மழை கொட்டும், அந்த நூறின் காரணத்தினால்தான் அப்றஹாவின் யானைகள் அப்துல் முத்தலிப்புக்கு ஸஜதா செய்தன.

**8- அபூ நுஜம் ஹளறத் அப்துல்லா இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா மூலம் அறிவிக்கின்றார்கள்,**

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பிறந்த அன்று ஹளறத் ஆமினா காதூன் றழியல்லாஹு அன்ஹா அவர்களின் வீடு சொர்க்கத்து ஹூறுல் ஈன்களால் நிறைந்து காணப்பட்டது, ஹளறத் ஆஸியா, இன்னும் பீபி மர்யம் றழியல்லாஹு அன்ஹுமா உள்ளிட்டோரும் பிரசன்னமாயிருந்தனர், மேலும் ஆமினா காதூன் றழியல்லாஹு அன்ஹா நபிகளாரின் புனித ஜனன. நேரத்தில் எழுவானும், படுவானும் துலங்கும் நூறைப்பார்த்தபின்புதான் நபியவர்கள் பிறந்தார்கள், பிறந்த உடனே ஸஜதாச் செய்தார்கள்.**

**மவாஹிபுல்லதுன்னியா பக்கம் 21**

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூறாக இருப்பது பற்றி ஏராளமான ஹதீதுகள் மூலம் நிரூபணமாயுள்ளது , இங்கு சுருக்கமாகக் கூறப்படுள்ளன, சில ஹதீதுகள் முன்னுரையிலும் கூறப்பட்டுள்ளன.**
**மலரும்.....**

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 7

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் "நூர்" என்பதற்கான இஸ்லாமிய அறிஞர்களின் சான்றுகள் !**

**1) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் றப்புத்த ஆலாவின் நூர் என்பது, முஸ்லிம் சமுகத்தில் காலாகாலம் இருந்தே வரும் அகீதாவாகும், அதில் எவருக்கும் மாற்றுக்கருத்து இருக்க வில்லை, உம்மத்திலுள்ள பெரியவர்களின் சில கூற்றுக்களை நமூனாவினடிப்படையில் முன்வைக்கின்றேன். படியுங்கள்!**

**2) ஹளறத் அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் நபி புகழ் கவிதைகளை ஹதீதின் சான்றுகள் என்ற தலைப்பில் முன் வைத்துள்ளோம், அதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்று குறிப்பிட்டுள்ளார்கள், அக்கவிதைகள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அவையில் அன்னாருக்கு முன்னாலேயே பாடப்பட்டவை என்பதும், அதற்கு நபியவர்கள் எந்த ஒரு மறுப்பையும் கூறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது .**

**3) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருவதனம் சூரியனைப்போன்று பிரகாசிக்கும் என்ற ஹளறத் அபூஹுறைறா**

றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்றை முன்னுரையில் நாம் குறிப்பிட்டுள்ளோம்.

4) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாறக்கான பல்லின் இடைவெளியிலிருந்து ஒளி வெளிப்படுவது தெரியவரும் என்ற ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் கூற்றை முன்னுரையில் குறிப்பிட்டுள்ளோம்.

5) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமுகம் பதினான்காம் நாள் முழுமதி போன்று இலங்கும் என்ற ஹளறத் ஹிந்து இப்னு அபீ ஹாலா றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்றையும் முன்னுரையில் முன்வைத்துள்ளோம்.

6) நீர் அன்னாரைப் பார்த்தால் சூரியன் உதிப்பது போன்று காண்பாய்! என்ற ஹளறத் றபீஃ பின்து முஅவ்வித் றழியல்லாஹு அன்ஹா அவர்களின் பொன்மொழியையும் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளோம்.

7) ஹளறத் ஷைகுஅப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி மதாரிஜுன் நுபுவ்வத் பாகம் 1. பக்கம் 118 ல் கூறுகின்றார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனி முழுவதும் ஒளியாகவே இருந்தது, ஒளிக்கு நிழல் விழுவதில்லை.

அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி தங்களுடைய "மௌழூஆத்துல் கபீர்" என்ற நூல் பக்கம் 86ல் கூறுகின்றார்கள்.

واما. نوره عليه السلام وهو في غاية من الظهور شرقا وغربا واول ما خلق الله نوره وسماه في كتابه نورا

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூர் எழுவானிலும், படுவானிலும் அதிஉச்சமாக இலங்கிக் கொண்டிருக்கின்றது, அல்லாஹுத்த ஆலா முதன்முதலில் அவர்களின் ஒளியைத்தான் படைத்தான், இன்னும், அல்லாஹுத்த ஆலா தன்னுடைய வேதத்தில் அன்னாரை நூர் என்று குறிப்பிட்டுள்ளான்.

8) இதே அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி தங்களுடைய மௌழுஆத்துல் கபீர்என்ற இதே நூலில் இதே பக்கத்தில் குறிப்பிடுகின்றார்கள்,

قال الله تعالى الله نور السموات والارض على مثل نوره قلب محمد.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான், அல்லாஹ் வானங்கள் மற்றும் பூமியின் ஒளியாகும், அல்லாஹ்வின் ஒளிக்கு உதாரணம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கல்பாகும்

9) இமாம் பூஸரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி தங்களுடைய கஸீதா புர்தா ஷரீஃபில் கூறுகிறார்கள்.

فانك شمس فضل هم كواكبها
يظهرن انوارها للناس في الظلم

அல்லாஹ்வின் ஹபீபே! தாங்கள் கருணையின் கதிரவனாகும். ஏனைய நபிமார்கள் அன்னாரின் தாரகைகள் , அன்னாரின் ஒளி இருளிருக்கும் மக்களை வெளிபடுத்துகின்றது.

10) இமாம் ஜலாலுதீன் ரூமி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் தங்களுடைய மஸ்னவி ஷரீபில் கூறுகின்றார்கள்.

اللہ کے نور کا سایہ بھی نور ہوتا ہے جو خدا سے دور ہو ان کا سایہ بھی دور ہے جو ہم کھاتے ہیں اس سے پلیدی نکلتی ہے جو حضور کاتے ہیں وہ سب خدا کا نور بنتا ہے

அல்லாஹ்வுடைய நூறின் நிழலும் நூறாக ஆகிவிடுகிறது, அல்லாஹ்விடமிருந்து தூரமாக இருக்கின்றவையின் நிழலும் கூட தூரமாகவே இருக்கிறது, நாம் சாப்பிடுபவைலிருந்து மலம் வெளிப்படுகிறது, ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உண்பவை யாவும் அல்லாஹ்வின் நூறாக மாறிவிடுகிறது.

11) இமாம் அஹ்மத் இப்னு முஹம்மத் அஸ்கலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் மவாஹிபுல்லதுன்னியா ஷரீபில் பாகம் 1 பக்கம் 9, கூறுகின்றார்கள்.

قال الله تعالى يا ادم ارفع راسك فرفع راسه فراى نور محمد صلى الله عليه وسلم في سرادق العرش فقال يا ربي ما هذا النور قال هذا نور نبي من ذريتك اسمه في السماء احمد وفي الارض محمد لولاه ما خلقتك ولا خلقت سماء ولا ارضا

ஆதமே! தனது சிரசை உயர்த்துவிராக! என்று அல்லாஹ் கூறினான், அவர்கள் தங்களுடைய சிரசை உயர்த்தியதும், அர்ஷின் திரைச்சீலைகளில் ஓர் ஒளியைப் பார்த்தார்கள், எனது ரப்பே! இது எவ்வகையான ஒளி என்று கேட்டார்கள், இது உம்முடைய சந்ததிகளில் வருகின்ற ஒரு நபியின் ஒளி! அவரின் திருநாமம் வானத்தில் அகமது, பூமியில் முஹம்மத், அவர் இல்லையாயின், உம்மை நாம் படைத்திருக்க மாட்டோம், வானம், பூமியையும் கூட படைத்திருக்க மாட்டோம் என்று அல்லாஹ் கூறினான்.

12) இதே இமாம் அஹ்மத் இப்னு முஹம்மது கஸ்தலானி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அதே மவாஹிபுல்லதுன்னியா பக்கம் 8ல் கூறுகின்றார்கள்.

ان الله تعالى لما خلق نور نبينا محمد صلى الله عليه وسلم امره ان ينظر الى انوار الانبياء فغشهم من نوره

فانطق هم الله به فقالوا يا ربنا من غشينا نوره فقال الله تعالي هذا نور محمد بن عبد الله ان امنتم به جعلتكم النبياء

அல்லாஹுத்தஆலா நபி கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒளியைப் படைத்த போது, அனைத்து நபிமார்களின் ஒளிகளைப் பார்க்குமாறு அந்த ஒளிக்குக் கட்டளையிட்டான், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளியால் சகல ஒளிகளையும்அல்லாஹுத்தஆலா மங்கவைத்து விட்டான், றப்புத்த ஆலா அவர்களைப்பேச வைத்ததும், எங்களின் றப்பே! எங்களை மங்க வைத்த ஒளி எது ?என்று நபிமார்கள் அனைவரும் கேட்டனர், இவர் முஹம்மத் இப்னு அப்துல்லாஹ் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்)ஆவார், இவரை நீங்கள் ஈமான் கொண்டால், உங்களை நபியாக ஆக்குவேன் என்று றப்புத்த ஆலா கூறினான்.

13) அல்லாமா ஸர்க்கானி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி ஹளறத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஹதீதுக்குரிய விளக்கத்தில் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

من نور ه اي من نور هو ذاته

அல்லாஹுத்த ஆலா றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களை அவனுடைய தாத்தின் நூறிலிருந்து படைத்தான்.

14) இமாம் அஹ்மது கஸ்தலானி மவாஹிபுல்லதுன்னியா ஷரீபில் கூறுகின்றார்கள்.

لما تعلقت ارادة الحق تعالى بايجاد خلقه ابرز الحقيقة المحمدية من انوار الصمدية في الحضرة الاحدية ثم سلخ منها العوالمة كلها علوها وسفلها

அல்லாஹுத்தஆலா படைப்புகளைப் படைக்க நாடிய பொழுது, சமதியத் என்ற குறிப்பான தாத்து ஹகீகத்துல் முஹம்மதிய்யாவை வெளிப்படுத்தியது, பின்னர், அதிலிருந்து அனைத்து மேலுலகம், கீழ் உலகம் வெளியானது .

15) தலாயிலுல் கைறாத் என்ற சிறப்பான நூலின் விரிவுரையான மதாலிஉல் மஸர்ராத் என்ற நூலில் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது

قد قال الاشعري انه تعالى نور ليس كالانوار وروح نبيه القدسية لمعة من نوره والملائكة اشرار تلك الانوار قال صلى الله عليه وسلم اول ما خلق الله نور ي ومن نور ي خلق كل شيء وغيره مما في معناه

இமாம் அபுல் ஹஸன் அஷ்அரி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி கூறுகின்றார்கள்.

அல்லாஹுத்தஆலா ஒளியாகும், ஆனால், ஏனைய ஒளிகளைப் போன்று அல்ல, இன்னும்,நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சங்கையான நூர் அந்த ஒளியில் ஒரு பிரகாசமாகும், இன்னும், மலக்குகள் அந்த ஒளிகளின்

பொறிகளாகும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள், முதன் முதலில் அல்லாஹ் என்னுடைய ஒளியைப் படைத்தான், இன்னும், என்னுடைய ஒளியிலிருந்து தான் அனைத்து வஸ்துக்களையும் படைத்தான்.

**இவற்றுக்கு மேலதிகமாக இன்னும் பல ஹதீதுகள் இருக்கின்றன, அவை அனைத்தின் உள்ளடக்கமும் ஒன்றாகவே இருக்கின்றது.**

16- அல்லாமா ஷாஹ் அப்துல் ஙனி நாபுலிஸி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி தங்களுடைய ஷறஹு தரீக்கத்துல் முஹம்மதியா என்ற நூலில் கூறுகிறார்கள்.

قد خلق كل شيء من نوره صلي الله عليه و سلم كما ورد به الحديث الصحيح

அனைத்து வஸ்துக்களும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒளியிலிருந்து தான் படைக்கப்பட்டன, இவ்வாறு ஸஹீஹான ஹதீதில் வந்துள்ளது.
மலரும்.....

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 8

### தேவ்பந்து உலமாக்களின் கூற்றுக்கள்.

1- தேவ்பந்திகளின் நாயகர் மௌலவி அஷ்ரப் அலி தானவி தனது ". நஷ்றுத்தீபி" என்ற நூலின் உள்ளடக்கத்தை இவ்வாறு ஆரம்பிக்கின்றார்,

முதல் பிரிவு, நூர் முஹம்மதி பற்றிய விளக்கம், இந்த பகுதியில் நாம் முன்வைத்த நூர் பற்றிய சகல ஹதீதுகளையும் பதிவு செய்துள்ளார், இத்தொடரில் அவர் கூறும்போது,

"முதன் முதலில் அல்லாஹுத்த ஆலா என்னுடைய ஒளியைத்தான் படைத்தான்" என்ற ஹதீதிலிருந்து ' நூறு முஹம்மதி" என்பதுதான் முதற் படைப்பு என்ற எதார்த்தம் நிரூபணமாயுள்ளது , அறிவிப்புக்களில் எந்த எந்த வஸ்த்துக்களுக்கு முதலாவது என்ற தீர்மானம் கொடுக்கப்பட்டதோ அவையனைத்தும் நூர் முஹ்மதிக்குப் பின்னுள்ளவை என்பது இந்த ஹதீதின் மூலம் திட்டவட்டமாக்கப்பட்டுள்ளது,

மேற்படி மௌலவி ஸாஹிபவர்கள் இரு விடயங்களை ஏற்றுள்ளார்கள்,

1) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நூராக உள்ளார்கள்,

2) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூர் சகல

படைப்புக்களுக்கும் முந்தியது, இன்னும், அன்னாரின் நூரிலிருந்துதான் சகல வஸ்த்துக்களும் உண்டாயின என்பதையும் இந்த நூலில் ஏற்றுள்ளார்.

தற்கால தேவ்பந்தி வஹாபிகள் தங்களின் குருநாதருக்கு என்ன ஃபத்வாவை வழங்குவார்களோ கவனித்துப் பாருங்கள்!

இதே மௌலவி அஷ்ரப் அலி தானவி. தனது தல்ஜுஸ்ஸுதூர் என்ற நூலில் கூறுகின்றார்.

میری بے مثال شعاع کے اگے اگے فناہ وگم ہو جاؤ ہو جاؤ نہیں تو میرے نور کے اگے رسوا ہو جائے گے

என்னுடைய நிகரில்லாத ஒளிச்சுடருக்கு முன் அழிவு தொலைய வில்லையெனில், எனது நூறுக்கு முன் கேவலமாகிவிடுங்கள்.

இதே நூலில் மற்றுமொரு இடத்தில் இவரே எழுதுகின்றார்.

نبی خود نور اور قران ملا نور
نہ ہو پھر مل کے کیوں نور علی نور

நபியே நூர், இன்னும் நூறான திருக்குர்ஆனும் கிடைத்துள்ளது, பின்னர், இரண்டும் சேர்ந்து நூறுன் அலா நூர் (ஒளிக்கு மேல் ஒளியாக) ஏனில்லை.?

ஷாஹ் வலியுல்லாஹ் சாஹிப் அவர்களின் கண்ணியமிக்க தந்தையாகிய ஷாஹ் அப்துர் ரஹீம் சாஹிப் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் தனது நூல் அன்ஃபாஸ் ரஹீமியாவில் கூறுகின்றார்.

فرش سے فرش تک اور اعلی فرشتے اسفل کی جنس سب کے سب حقیقت محمدیہ سے پیدا ہے حضور کا فرمان ہے سب سے پہلے اللہ نے میرا نور پیدا کیا اور اگر اپ نہ ہوتے تو میں اسمان کو پیدا نہ کرتا اگر اپ نہ ہوتے تو میں اپنی ربوبیت کو نہ کرتا

பர்ஷ் என்ற பாதாளத்திலிருந்து அர்ஷ் வரையிலும், இன்னும், மேலுலக மலக்கும் கீழுலக இனங்கள் வரையான யாவும் ஹகீகத்துல் முஹம்மதியாவிலிருந்துதான் படைக்கப்பட்டன, முதன் முதலில் அல்லாஹ் என்னுடைய ஒளியைப் படைத்தான், நீங்கள் இல்லாவிட்டால், நான் வானங்களை படைத்திருக்க மாட்டேன், நீங்கள் இல்லாவிட்டால், நான் எனது ரூபிபியத்தை வெளிப்படுத்தி இருக்க மாட்டேன் என்று (அல்லாஹுத்தஆலா கூறியதாக) ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

தேவ் பந்து கூட்டத்தின் இமாம் மௌலவி இஸ்மாயில் திஹ்லவி தனது "மன்ஸப் இமாமத் " என்ற நூலில் கூறுகிறார்.

ہاں جو اندھا ہے وہ حضور صلی اللہ علیہ وسلم کے نور انشان سے بے خبر ہے۔

உண்மைதான்!, குருடர்களுக்கு ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனிதத்துவ ஒளி பற்றிய எந்த அறிவும் இல்லை..

இதே மௌலவி இஸ்மாயில் சாஹிப் தனது "மன்ஸப் இமாமத்" என்ற நூலில் மற்றுமொரு இடத்தில் கூறுகிறார்.

لیکن برکت کا نازل ہونا تو اس کا بیان یہ ہے کہ حضرت انبیاء کا وجود دنیا کو چمکانے والے سورج کی طرح ہے کہ جب اس کا نور دنیا میں پھلتا ہے تو رات کی تاریکی دور ہو جاتی ہے

ஆயினும், பறக்கத் இறங்குவதற்கான விளக்கம் இதுதான், சங்கையான நபிமார்களின் இருப்பு உலகத்தில் சூரியனைப் போன்றுள்ளது, அந்த ஒளி உலகத்தில் படரும் போது இரவின் இருட்டு இல்லாது போய்விடுகின்றது.

மௌலவி ஹுஸைன் அஹ்மத் ஸாஹிப் தன்னுடைய தும், இன்னும் தனது அனைத்து தேவ்பந்து உலமாக்களினதும் அகீதாவை தனது "அஷ்ஷிஹாபுத் தாகிப்" என்ற நூல் பக்கம் 50ல் எழுதுகின்றார்.

எமது பெரியோர்களின் கூற்றுக்களையும், அகீதாக்களையும் கவனித்துப் பாருங்கள்! இவர்கள் அனைவருமே ஒளிமயமான றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை ப்பொருட்டாக்கி எக்காலத்திலும் அல்லாஹ்வின் றஹ்மத்தையும், எல்லையற்ற பேருதவிகளையும் பெற்றுக்கொள்வதை அகீதாவாகக்கொண்டவர்களாகவே இருந்து வந்துள்ளனர், அவர்களின் அகீதா இவ்வாறுதானிருந்தது, அதாவது,

ஆதிகாலம் தொட்டு இதுநாள் வரை உலகத்தில் என்னென்ன றஹ்மத்துக்கள் வந்ததோ, இன்னும் வருமோ அந்த நிஃமத் வுஜூது(இருப்பு)க்குரியதாயினும் சரி, அல்லது வேறு விதங்களுக்குரியதாயினும் சரி இவையனைத்திலும் முதலில் சூரியனிலிருந்து ஒளி சந்திரனுக்கு வந்துள்ளது, இன்னும் சந்திரனிலிருந்து ஆயிரமாயிரம் கண்ணாடிகளுக்கு வந்தது போல் அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமான தாத் அனைத்திலும் வியாபித்துள்ளது .

ஹகீகத்தே முஹம்மதியாதான் உலகத்திற்கும், உலகத்திலுள்ளவர்களின் பூரணத்திற்கும் மூலமாக இருக்கின்றது, ஹகீகத்தே முஹம்மதிய்யா அலைஹிஸ்ஸலாம் உலகத்திற்கும் உலகத்திலுள்ள படைப்புக்கள் அனைத்தின் பூரணமாக இருக்கின்றது,

لولاك لما خلقت الافلاك

உம்மைப்படைக்காவிட்டால், அண்ட கோளங்களையே படத்திருக்க மாட்டேன்.

اول ما خلق الله نوري

அல்லாஹ் முதலில் என்னுடைய ஒளியைத்தான் படைத்தான்.

انا نبي الانبياء ..

நான் நபிமார்களின் நபி என்பதற்கான பொருளாகும்.

2- தேவ்பந்திகளின் ஒட்டு மொத்த குருநாதர் மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி தனது "இம்தாதுஸ்ஸுலூக்", என்ற நூல் பக்கம் 85ல் எழுதுகின்றார்.

இந்த காரணத்தினால் அல்லாஹுத்த ஆலா தனது ஹபீப் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் விடயத்தில்,

"அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உம்மிடம் ஒளியும் தெளிவான வேதமும் திட்டமாக வந்துள்ளது" என்று கூறினான். 'நூர்' என்பது புனிதமான றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தாத்தாகும்,

மேலும் அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

நபியே! ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உம்மை நாம் சாட்சி பகர்பவராகவும் நற்செய்தி சொல்பவராகவும், எச்சரிக்கை செய்பவராகவும் அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவராகவும் இன்னும் பிரகாசிக்கும் சூரியனாகவும் உம்மை நாம் அனுப்பி வைத்துள்ளோம். முனீர் என்பது பிரகாசிக்கின்றவர் , வெளிச்சம் கொடுப்பவருக்குக்கூறப்படும்.

இந்த வாசகத்தின் மூலம் மௌலவி. றஷீத் அஹ்மத் ஸாஹிப் மூன்று விடயங்களைக் குறிப்பிடுகின்றார்,

1- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூர் ஆவார்கள்.

2- قد جاءكم من الله نور وكتب مبين

என்ற லிருவசனத்லிலுள்ள நூர் என்பது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை க்குறிக்கும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தனியாக நூர் மட்டுமல்ல, முனீர் பிரகாசிக்கச்செய்பவராகும் அதாவது, தன்னைப்பின்பற்றும் தொண்டர்களை நூறாக ஆக்குகின்றார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் சூரியனாகும், இரவில் சந்திரன், நட்சத்திரங்களுக்கும், பகலில் அணுக்களையும் பிரகாசிக்கச்செய்கின்றார்கள்

இப்போது எந்த ஒரு தேவ்பந்திக்கும் இந்த மூன்று விடயங்களையும்

நிராகரிப்பதற்கு உரிமை கிடையாது! ஏனெனில், அவர்களின் சத்திய சீலர்,வழிகாட்டும் ஞானகுரு இவையனைத்தையும் ஏற்றுள்ளார்.

3- இதே மௌலவி றஷீத் அஹ்மத் ஸாஹிப் தனது இம்தாதுஸ்ஸுலூக் என்ற நூல் பக்கம் 86ல் கூறுகின்றார்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்,

அல்லாஹுத்த ஆலா என்னை தன்னுடைய நூறிலிருந்து படைத்துள்ளான், இன்னும், முஸ்லிம்களை என்னுடைய நூறிலிருந்து படைத்துள்ளான்.

4- மௌலவி றஷீத் அஹ்மத் ஸாஹிப் இதே நூல் பக்கம் 86ல் கூறுகின்றார்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சந்ததியில் வந்தவர்கள்தான், ஆனாலும் தான் பரிசுத்தமான நூறாக ஆகிவிட்டதாகக்கூறி தன்னைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டுள்ளார்கள், அல்லாஹுத்த ஆலாவும் அவர்களை நூர் என்று கூறியுள்ளான், இந்த ஹதீது சந்தேகத்திற்கு இடமில்லாமல் பல தரப்பாக அறிவிக்கப்பட்டு வந்துள் முதவாதிரான தரத்தை எட்டியுள்ளது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் இல்லை, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைத்தவிர்த்து அனைத்து சடப்பொருள்களுக்கும் நிழல் உண்டு என்பது வெளிப்படையாகும்.

இந்த வாசகத்தில் மௌலவி றஷீத் அஹ்மத் ஸாஹிப் இரண்டு விடயங்களை ஏற்றுள்ளார்.

1- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நூர், றப்புத்த ஆலா அவர்களை நூர் என்று கூறியுள்ளான்.

2- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனிக்கு நிழல் கிடையாது, அதாவது அன்னாரின் நூறானியத் சில விதங்களில் உணரப்பட்டுள்ளது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூர்பற்றி ஏராளமான ஆதாரங்களைக்கூற முடியும், ஆயினும், இத்தோடு நான் சுருக்கிக்கொள்கின்றேன், ஏற்கும் மனப்பான்மையுள்ளலர்களுக்கு இவ்வளவும் போதுமாக இருக்கும், முரண்டு பிடிப்பவர்களுக்கு பெரிய ஏடும் போதாது ..
மலரும்.....

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 9

### அறிவியல் ஆதாரங்கள்

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹுத்த ஆலாவின் நூர் என்பதையும், அன்னாரின் ஒவ்வொரு முபாறக்கான அவயங்களும் நூர் என்பதையும், அன்னாரின் ஒவ்வொரு நிலையும் நூர்தான் என்பதையும் புத்தி கூட ஏற்கின்றது,
ஆதாரங்கள் வருமாறு .

1- நூர் என்பது, தானும் வெளியாகி, அடுத்ததையும் வெளியாக்க வல்லதாகும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை கடல், கரை, உலர்ந்தவை, பசுமையானவை, தாவரங்கள், கற்கள் விண்ணகத்து அனைத்து விண்மீன்கள், நிலத்தின் ஒவ்வொரு துகள்கள் உள்ளிட்ட யாவும் விளங்கும் வகையில் வெளியாகியுள்ளார்கள்,

மனிதன் அன்னாரை அறிந்துள்ளான், விலங்குகள் அன்னாரை புரிந்துள்ளன, பொடிக்கற்கள் அன்னாரின் கலிமாவை மொழிந்துள்ளன, கற்கள் அன்னாருக்கு சாட்சியம் பகர்ந்துள்ளன, அன்னார் எவராலும் மறைக்கப்படாத அளவுக்கு இலங்கினார்கள், அன்னாரோடு உறவு வைத்தவர்களும் இலங்குமளவுக்கு இலங்கினார்கள், மதீனத்துல் முனவ்வறாவின் தெருக்களெல்லாம் அன்னாரால் பிரகாசித்தன, மக்கத்துல் முகர்ரமாவின் மூலை முடுக்குகள் சந்தை , கஃபாவின் சுவர்களும் , வாசல்கள் உள்ளிட்டவையும் ஜொலித்தன,

அன்னாரின் புண்ணியத்தால் அன்னை ஹலீமாவின் புகழை உலகம் ரீங்காரம் செய்து கொண்டிருக்கின்றது, அன்னாரின் பேறால் அன்னாரின் திருக்குடும்பத்தின் மகத்துவம் கொத்பாப் பிரசங்களில் ஒலிக்கப்படுகின்றது, ஒரு இலட்சத்து இருபத்திநாலாயிரம் நபிமார்களில் நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பெயர் குறிப்பிட்டுக்கூறியவர்கள் மட்டும் இதுநாள்வரை வெளியாகியுள்ளார்கள், ஏனையோர் மறைந்துவிட்டனர்,

அல்லாஹுத்த ஆலாவின் தாத், ஸிபாத்துக்களை யும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்தான் நமக்கு அறிமுகப்படுத்தினார்கள், அவற்றை நமது அறிவால் அடைந்து கொள்வது சாத்தியமற்றதாகும், சுருங்கச்சொன்னால் நூர் என்ற பொருள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களில் பரிபூரணமாக பொதிந்திருக்கின்றது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பரிபூரணமான நூறாகும்.

2- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் துஆக்கள் நிச்சயமாக ஒப்புக்கொள்ளப்படும், அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்,

ولسوف يعطيك ربك فترضي

நீங்கள் விரும்புமளவு றப்பு உங்களுக்குத் தருவான்.

இன்னும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும்

இவ்வாறு து ஆக்கேட்டுள்ளார்கள்.

اللهم اجعلني نورا

யாஅல்லாஹ்! என்னை நூறாக ஆக்கியருள்வாயாக!

இந்த துஆ ஒப்புக்கொள்ளப்பட்டிருக்குமா?இல்லையா? என்று இப்போது சொல்லுங்களேன், சந்தேகமில்லாமல் நிச்சயமாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் என்றால் அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூர்தானே!

3- மனிதனின் திரேகம் இருளானது, றூஹ் ஒளியானது ,

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான் .

قل الروح من امر ربي

கூறுங்கள் ! றூஹ் எனது றப்பின் கட்டளையிலுள்ளதாகும்.

அதாவது , ஆலமுல் அம்றில் உள்ள படைப்பாகும், இன்னும், ஆலமுல் அம்று என்பது நூறாகும் அல்லாஹ்வால் ஒப்புக்கொள்ளப்பட்ட றூஹின் பிரகாசத்தால் அவர்களுடைய உடலும் ஒளியாகிவிடுகின்றது, ஆகவேதான் சிலவலிமார்களில் சில வேளைகளில் வாள்வீச்சும் தாக்கம் செய்வதில்லை, அதன்பாதிப்பால் தப்பிவிடுகின்றார்கள், சில வலிமார்கள் ஊண் குடிபின்றி மாதக்கணக்கில் இருந்துள்ளார்கள்,

ஃபதாவா ஹதீதியாவில் அல்லாமா இப்னு ஹஜர் மக்கி றஹ்மதுள்ளாஹி அலைஹி தஸவ்வுப் பற்றிய பாடத்தில் ஷைகுல் அக்பர் முஹ்யத்தீன் இப்னு அறபி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களைப்பற்றி இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்.

حتی انه مکث علي ثلاثة اشهر علي وضوء واحد

அன்னார் மூன்று மாதங்கள் வரை ஒரே ஒரு வுழுவோடு தங்கியிருந்தார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இந்த முபாறக்கான கூட்டத்தின் தலைவரும் வழிகாட்டியுமாவார்கள், அன்னாரின் றூஹின் நூர் புனித திருமேனியும் ஜோதியாகுமளவுக்கு திரேகத்தில் மிகைத்திருந்தது,

4-றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் திருவுடலுக்கு நிழலில்லையென்று அறிவிப்புக்களில் நிரூபணமாகியுள்ளது, இதன் விரிவான விளக்கம் இன்ஷாஅல்லாஹ் அடுத்த அத்தியாயத்தில் இடம் பெறும், அடர்த்தியான பொருளுக்கு நிச்சயமாக நிழல் விழவே செய்யும், எனவே றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நூர் என்பது

தெளிவாகியுள்ளது, அடர்த்தி நபியவர்களுக்கு பக்கத்திலும் கிடையாது.

5- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மிஃறாஜுடைய இரவில், நெருப்பு மண்டலம், குளிர் மண்டலம் உள்ளிட்டவையைத் தாண்டிச்சென்றார்கள், இன்னும், அங்கிருந்து இடத்தின் தொங்கல் வரை சென்று, பின் இடமில்லாத வெட்ட வெளிக்குச்சென்றார்கள், சடம் அக்கினியிலிருந்து பாதுகாப்புப் பெறாது என்பது வெளிப்படையானது, சடத்திற்கு இடம் அவசியமாகும், இதிலிருந்து மிஃறாஜ் பயணம் நூறானியத்தான நிலையில் நிகழ்ந்துள்ளதாகத் தெரிகின்றது.

6- எந்த ஒரு மனிதனும் காற்றில்லாமல் வாழ முடியாது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மிஃறாஜுடைய இரவில் எங்கெல்லாம் சென்றார்களோ அங்கெல்லாம் காற்றுக்கான எந்த தடயமும் கிடையாது, ஆனாலும், அங்கு உயிரோடுதானிருந்தார்கள், இதிலிருந்து அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூர் என்று தெரிகிறது.

7- மனித இதயத்தில் ஒரு சிறு கீறல் விழுந்தாலும் மரணம் சம்பவித்துவிடும், ஆனால், மலக்குகள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனியிலிருந்து அன்னாரின் முபாறக்கான இதயத்தை வெளியே எடுத்து அதில் நூறை நிறப்பிய போதும் அன்னார் உயிரோடுதான் இருந்தார்கள், இதிலிருந்து அன்னார் நூர் என்பதும், அன்னாரின் வாழ்வு நூறானியத்தாக இருப்பதும் தெரிய வருகின்றது,

பெருமானார் றஸூலேகரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சங்கையான வாழ்வு நம்மைப்போன்று முழுமையான சடத்துவமாக இருந்தால், உண்ணல் குடித்தலில் தேவையற்று இருந்திருக்க முடியாது,( அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உண்ணல் பருகலின்றி பலநாட்கள் தொடர் நோன்பு நோற்றார்கள்) அன்னாரின் நூறை இப்போதும் சில வலிமார்கள் கண்ணால் கண்டுகொண்டு தானிருக்கின்றார்கள், மௌலானா ஜாமி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி கூறுகின்றார்கள் .

وجهه في نظري كل غدات وعشي

அன்னாரின் திருமுகம் ஒவ்வொரு காலையிலும், மாலையிலும் என்பார்வையிலிருக்கின்றது.

ஒரு விநாடி அன்னாரின் நூறை நான் பார்க்கவில்லையாயின் , என்னை நானே முர்தத் என்று ஃபத்வா கொடுப்பேன் என்று சில வலிமார்கள் கூறியுள்ளனர்,இன்னும், நாம் காணாத எத்தனையோ விடயங்கள் இருக்கின்றன, ஆனாலும் பார்வையுள்ளவர்கள் சொல்வதைக் கேட்டுத்தான் சூரியனையும் அதன் ஒளியையும் ஏற்றுக்கொள்கின்றோம், நமது பார்வையின் பலவீனத்தால் அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூர் நமக்குத் தெரியாவிட்டால், பார்த்தவர்கள் கூறுவதைக் காது தாழ்த்திக்

கேட்கத்தான் வேண்டும்.

9- றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மிஃறாஜுடைய இரவில் பல்லாயிரம் வருடத்தூரப் பயணத்தை ஒரு மணித்துளியில் கடந்து சென்றார்கள், இவ்வளவு அதிகளவான தூரத்தை குறைந்த நேரத்தில் அடர்த்தியான சடத்தால் கடப்பது அசாத்தியமாகும், எனவே அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூர் என்பது தெரிகின்றது, நமது கண்ணொளியால்,அல்லது நமது கற்பனை அல்லது சிந்தனையின் ஒளியால் ஒருவிநாடியில் வெகு தூரத்தை ஒரு விநாடியில் கடப்பதுபோல் றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் இவ்வளவு வெகு தூரத்தை ஒரேகணத்தில் கடந்தார்கள்.

10- திருக்குர்ஆன் திருநபியவர்களின் திருப்புகள் பற்றிக் கூறுகின்றது.

عزيز عليه ما عنتتم.

உங்களின் கஷடம் அவருக்கு பாரமாகவும், வருத்தமாகவுமிருக்கின்றது.

உடலிலுள்ள ஒவ்வொரு உறுப்பின் வருத்தத்தை றூஹ் தனது நூறானியத்தின் மூலமாக அறிந்து கொள்கின்றது, காலில் அடிபட்டால் அதை றூஹ் அறிகிறது, தலை வலித்தால் றூஹ் அறிகிறது, இவ்வாறுதான் றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் நூறாக இருந்துகொண்டு தங்களின் உம்மத்தின் கஷ்டங்களையும் , வலியையும் ஒவ்வொரு நிலையையும் உணர்கின்றார்கள்,

11- பன்மையின் ஆரம்பம் ஒருமையிலிருந்து ஆரம்பமாவதும், பன்மைக்குரிய பிரயோசனம் ஒருமையிலிருந்தே கிடைப்பதும் குத்றத்தின் நியதியாகும், வாரிவழங்கும் தகுதி ஒருமைக்குத்தான் இருக்கின்றது , வானத்தில் மின்னுகின்ற கணக்கற்ற விண்மீன்கள் ஒரேஒரு சூரியனிலிருந்துதான் ஒளியைப்பெற்றுக்கொள்கின்றது, மரத்தின் அனைத்து இலை ,கிளைகள்,பூ, காய் உள்ளிட்ட அனைத்திற்கும் ஆரம்பம் ஒரு வேர்தான் அனைத்துக்குமான ஆகாரம் அந்த ஒரு வேரிலிருந்துதான் கிடைக்கின்றது,

அனைத்து மனிதர்களின் சடத்துவ ஆரம்பம் ஒரேஒரு ஆதம் அலைஹிஸ் ஸலாம் அவர்களாகும், உடலின் அனைத்து உறுப்புக்களுக்குமான உதவி ஒரேஒரு இதயத்திலிருந்து தான் கிடைக்கின்றது, ஆக, அனைத்து பன்மையிலும் ஒருமைக்குரிய உதவி இருக்கவே செய்கின்றது, அல்லாஹ் அல்லாத அதிகளவான உலகங்களின் ஆரம்பமும் ஒருமையிலிருந்துதான் உருவாகியிருக்க வேண்டும், இப்பன்மையிலும் ஒன்றுதான் அருள்பாலிப் பதாகவுமிருக்க வேண்டும், அருள்பாலிக்கும் மூல வேரான இந்த ஒன்றுக்குப் பெயர்தான் ஹகீகத்தே முஹம்மதியா, நூர் முஹம்மதியாவாகும், இவ்வாறில்லாவிட்டால் இந்த பன்மைகளெல்லாம் எந்த ஒருமையின் கிளைகள் என்பதையும், எந்த ஒருமை இவற்றிலெல்லாம் செயல்படுகின்றது என்பதையும்

கூறுங்கள் பார்க்கலாம். ஹகீகத்தே முஹம்மதியாதான் பிரபஞ்சத்திற்கான அஸலாகும், இன்னும், அனைத்து உலகங்களும் அதிலிருந்துதான் அருளைப்பெறுகின்றது , இனியும் பெற்றுக்கொண்டேயிருக்கும்..

மலரும்....

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 10

### பிரிவு : 2

### இது தொடர்பான குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.

### குற்றச்சாட்டு : 1

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அல்லாஹ்வின் நூர் என்றால், அல்லாஹ்வின் நூர் துண்டாகிவிட்டது, இன்னும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் ஒரு பகுதியாகிவிட்டார்கள், இன்னும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களில் அல்லாஹ் விடுதிவிட்டான், என்றாகும் , இந்த அகீதா ஈஸாயிகளின் அகீதாவை ஒத்துள்ளது, அவர்கள் ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்களில் உலூஹியத் விடுதிவிட்டது என்று நம்புகின்றார்கள்.

பதில் : மறுப்பாளர் இதைப் புரிந்து கொள்ளாததுதான் இவ்வாறான கேள்விகள் எழுவதற்கான அடிப்படைக் காரணமாகும். அல்லாஹ்வின் நூறாக ஆகுதல் என்பது , நபி கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எத்தொடர்புமின்றி நேரடியாக றப்பிடமிருந்து அருளைப்பெற்றுக்கொள்ளுகிறார்கள், இன்னும், ஏனைய அனைத்து படைப்புக்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் மூலமாக றப்பின் உதவியைப் பெற்றுக்கொள்கின்றார்கள் என்பது மட்டும்தான் இதற்கான பொருளாகும்.

உதாரணமாக, கண்ணாடி சூரியனுக்கு நேராக இருந்தால், சூரியனின் பிரதி பிம்பம் இந்த கண்ணாடியில் பிரகாசத்தைக்கொடுக்கும், பின்னர் ரஸம் பூசிய கண்ணாடிகளுக்கு முன் வைத்தால், அவையனைத்தும் இந்த கண்ணாடியிலிருந்து பிரகாசிக்கும், முதற்கண்ணாடி சூரியனின் துண்டல்ல, சூரியன் தானுமல்ல, எனினும் வேற்று தொடர்பின்றி அதிலிருந்து தஜல்லியைப் பெற்றுக்கொள்கின்றது, அடுத்த கண்ணாடி அதன்மூலம் வெளிச்சத்தைப் பெறுகின்றது, இந்தத் தொடர்பு ஹளறத் ஸாலிஹ் அலைஹிஸ்ஸலாமவர்களின் ஒட்டகத்தை ناقة الله அல்லாஹ்வின் ஒட்டகம் என்றும், ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்களை روح منه அல்லாஹ்வில் நின்றுமான றூஹ் என்று திருக்குர்ஆன் கூறுவது போன்றுள்ளது, அதாவது, பெற்றோரின் துணையின்றி றப்பால் பிறந்தவர்கள் என்பது கருத்தாகும்.

### குற்றச்சாட்டு : 2

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நூர் இல்லை, றப்புத்த ஆலா கூறுகின்றான்.

قل انما انا بشر مثلكم

கூறுவீராக! நான் உங்களைப்போன்ற மனிதர்.

நபியவர்கள் மனிதர் என்றால், அவர்கள் நூர் கிடையாது, மனிதத்துவமும், நூறும் ஒன்று சேரமுடியாது,

பதில் : றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூறும்தான், மனிதனும்தான் ,அதாவது நூறான மனிதர், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஹகீகத் நூர், ஆடை பஷர் மனிதம் ,

றப்புத்த ஆலா ஹளறத் ஜிப்ரீயில் அலைஹிஸ்ஸலாமவர்கள் விடயத்தில் கூறுகின்றான்,

فارسلنا اليها روحنا فتمثل لها بشرا سويا

மர்யமின் பக்கம் எமது றூஹை நாம் அனுப்பினோம், அவர் அவருக்கு முன்னால் திடகாத்திரமான ஆணின் கோலத்தில் வெளியானார்.

ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் மலக்கு ஒளி, ஹளறத் மர்யம் அலைஹஸ்ஸலாமவர்களுக்கு முன்னால் மனித கோலத்தில் வெளியானார், இந்த நேரத்தில் மனித கோலத்தில் வெளியான காரணத்தால் நூறானியத்திலிருந்து வேறாகிவிடவிடவில்லை, சங்கையான ஸஹாபாக்கள் ஹளறத் ஜிப்ரியீல் அலை ஹிஸ்ஸலாமவர்களை மனித கோலத்தில் பார்த்துள்ளார்கள், கறுத்த முடி , வெள்ளை ஆடை , கண், மூக்கு , காது இன்னும் இதுவல்லாத எல்லாமே இருந்தன , இவை இருப்பதோடு அவர்கள் நூர்தான், இவ்வாறு ஹளறத் இப்றாஹீம், ஹளறத் லூத் ஹளறத் தாவூத் அலைஹிமுஸ்ஸலாம் உள்ளிட்டவர்களிடமும் மனித கோலத்தில் மலக்குகள் வந்தார்கள்,

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

هل اتاك حديث ضيف ابراهيم اذ دخلوا عليه فقالوا سلاما قال سلام قوم منكرون

நேசரே! இப்ராஹீமுடைய கண்ணியமான விருந்தாளிகளின் செய்தி உங்களுக்கு கிட்டியுள்ளதா? அவர்களிடத்தில் அவர்கள் வந்ததும் சலாம் கூறினார்கள், சலாம் கூறியவர்கள் அறிமுகமில்லாத மக்களாகும். 51: 24-25

هل اتاك نبوء الخصم اذ يسوردا المحراب اذ دخلوا على داوود ففزغ منهم قالوا لا تخف خصمن بغي بعضنا

علي بعض

அவர்கள் தாவுதின் மீது நுழைந்ததும் அவர்களிடம் இருந்து தடுக்கப்பட்டார், நீர் அச்சப்பட வேண்டாம், நாங்கள் இரு கூட்டத்தார், ஒருவன் மற்றவனுக்கு அநியாயம் செய்து விட்டான். 31 :21

ولما ان جاءت رسلنا لوطا سيئ بهم وضاق بهم ذرعا وقالوا لا تخف ولا تحزن انا منجو ك الا امراتك كانت من الغابرين

நமது மலக்குகள் லூத்திடம் வந்ததும், அவர்களின் வருகையின் காரணமாக துக்கப்பட்டு மன சங்கடத்தில் உள்ளவரானார், அஞ்ச வேண்டாம், துக்கப்படவும் வேண்டாம், நிச்சயமாக உம்மையும், உமது வீட்டு டையவர்களையும் நாம் காப்பாற்றுவோம், உமது மனைவியைத் தவிர, அவள் மாட்டிக்கொண்ட வர்களுள் ஆகிவிட்டாள் 29: 32

சங்கையான நபிமார்கள் சமூகத்திற்கு மனித கோலத்தில் மலக்குகள் வருகை தந்துள்ளார்கள் என்பது இத்தனை திருவசனங்களின் மூலமாகத் தெரிய வந்துள்ளது, ஆனாலும், அவர்கள் இதற்கு மத்தியிலும் நூறாகத்தானிருந்தார்கள், ஆக , நூறானியத் பஷரியத்திற்கு எதிரானதல்ல.

குற்றச்சாட்டு: 3

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் நூறாகவும் அனைத்து இடங்களிலும் ஹாழிர், நாழிறாகவுமிருந்தால் எந்த இடத்திலும் இருட்டு இருக்க மாட்டாதே! எல்லா இடங்களிலும் வெளிச்சம் இருக்க வேண்டுமே! ஆகவே,ஒன்றில் நபியவர்கள் ஒளியில்லை அல்லது ,ஏல்லா இடங்களிலும் ஹாழிர் , நாழிர் இல்லை.

பதில் : இந்தக்கேள்விக்கு இரண்டு விதமான பதிலுண்டு !

1- வாயடைக்கும் பதில் 2- நிபுணத்துவ விளக்கம்.

1- றப்புத்த ஆலா நூறாகும், எந்த நேரத்திலும் எம்மோடுதானிருக்கின்றான், அப்படியிருந்தும், எல்லா இடங்களிலும் வெளிச்சமில்லையே!

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

اللّٰه نور السموات والارض.

அல்லாஹ் வானங்கள் இன்னும் பூமியின் ஒளியாகும்.

وهو معكم اينما كنتم

நீங்கள் எங்கிருந்தாலும் அந்த றப்பு உங்களோடுதானிருக்கின்றான்.

نحن اقرب اليه منكم ولكن لا تبصرون.

உங்களை விட நாம் அவருக்கு மிக அருகில் இருக்கின்றோம், ஆயினும், உங்களுக்கு தெரிவதில்லை..

ان اللّٰه مع الصابرين

நிச்சயமாக அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கிறான்.

மேலும் திருக்குர்ஆன் நூறாகும், ஒவ்வொரு வீட்டிலும் திருக்குர்ஆன் இருக்கின்றது, ஆனாலும் வெளிச்சமில்லையே! மலக்கு ஒளி, எம்மோடு ஒட்டியிருக்கின்றார்கள், ஆனால் அவர்களின் ஒளி எம்மில் படுவதில்லையே!

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وانزلنا اليكم نورا مبينا.

இன்னும், நாம் உம்பால் பகிரங்கமான நூறை இறக்கினோம்.

قل يتوفكم ملك الموت الذي وكل بكم

கூறுவீராக! உங்கள் மீது சாட்டப்பட்ட மலக்குல் மௌத் உங்களின் உயிரைக் கைப்பற்றுகின்றார்.

இப்போது கூறுங்கள்! ஒன்றில் றப்புத்த ஆலா நம்மோடு இல்லை, அல்லது, அவன் நூரில்லை, ஆதேபோன்று மலக்குகள், திருக்குர்ஆன் நம்மோடு இல்லை அல்லது அவர்கள் நூறில்லை திருக்குர்ஆன் நூறில்லை,

நிபுணத்துவ பதில்:-

நூர் இரு வகைப்படும், 1) புலன்சார்ந்தது 2) அகம் சாந்த கருத்தியலானத.

புலன்சார்ந்த நூரைக்கிரகிக்க புலகாட்சியால் கிரகிப்பது அவசியமாகும். கருத்தியலான நூறைக்கிரகிக்க பரிசுத்தமான ஆற்றலுள்ள கண்கள் வேண்டும். கபோதிக்கு சூரியனைப்பார்க்க முடியாவிட்டால் , பார்த்தவர் சொல்வதைக் கேட்டு அதன் நூறை ஏற்க வேண்டும்,. இவ்வாறு பரிசுத்த ஆற்றலைப்பெற்றவர்களான அல்லாஹ்வுடைய வலிமார்கள் நூறே முஹம்மதியைப் பார்க்கின்றார்கள், கிரகிக்கின்றார்கள், அவர்களிடம் கேட்டும், திருக்குர்ஆனை ஏற்றும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூறை

ஏற்றுக்கொள்ளுங்கள்.
மலரும்.....

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 11

### குற்றச்சாட்டு : 4

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூறு என்றால், உண்ணல் பருகல் ஏன்? அவர்களுக்கு சந்ததிகள் எதற்காக இருக்கின்றன?, அனைத்து செய்யிதுகளும் நூறாகவேதானே இருக்க வேண்டும்! ஏனெனில், மனிதனின் குழந்தை மனிதன், குதிரையின் குட்டி குதிரை , சிங்கத்தின் குட்டி சிங்கம், புலியின் குட்டி புலி, இவ்வாறு நூறின் பிள்ளை நூறாகத்தானே இருக்க வேண்டும்?

பதில்: நூறுக்கு பிள்ளைகள் இல்லையென்று எந்த ஒரு ஆயத்திலும், ஹதீதிலும் கிடையாது, அவ்வாறு இருக்குமாயின் முன்வையுங்கள்! மலக்குகளுக்கு பிள்ளைகள் கிடையாது, ஏனெனில் அவர்கள் மலக்குகள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்று நம்புகின்றோம், மலக் என்று கூறுவதில்லை, உங்களின் வெற்றுப் பேசுக்களெல்லாம் வேலைக்காகாதவை,

இவ்வாறான கேள்விகள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை மனிதரில்லை என்று மறுத்தால்தான் வரும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூறும்தான், மனிதரும்தான், இன்னும் கூறப்படுகின்ற அனைத்து விடயங்களும் பஷரியத்தான நிலையிலுள்ள மனிதனுக்குரியதேயன்றி நூறானியத்திற்குரியதல்! .

ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் விண்ணிலிருக்கின்றார்கள், உண்ணல் குடித்தல், உறங்கள் சந்ததி மற்றும் இவை தவிர்ந்த அனைத்தையும்விட்டும் பரிசுத்தமாக இருக்கின்றார்கள், ஏனெனில் அங்குள் இடம் நூறானியத்திற்கான இயல்பாகும்,, பின்னர், உலகத்திற்கு அவர்கள் வந்தால், உண்ணுதல், பருகல், திருமணம், பிள்ளை பெறுதல் உள்ளிட்ட அனைத்தும் நடக்கும், அப்போது மனித இயல்பிலிருப்பார்கள்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மிஃறாஜ் இரவில் பல்லாயிரம் வருடத்தூரத்தை கடந்து சென்றார்கள், அந்த நேரத்தில் நூறானியத்தின் இயல்பிலிருந்தார்கள்,அங்கு உண்ணல் பருகலுக்கான தேவையிருக்கவில்லை, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நோன்பு திறக்காமல் தொடர்நோன்பு நோற்றார்கள், அந்த லேளையில் பசி உணர்வற்றிருந்தார்கள், ஆயினும் வேறு நிலையில் உணவுகிடைக்காத போது பசியை உணர்ந்தார்கள் தொடர்நோன்பு கால நேரத்தில் நூறானியதின்

நிலையிலிருந்தார்கள், ஏனைய வேளைகளில் பஷரியத்தின் நிலையிலிருந்தார்கள்,

ஹாறூத் மாறுத் என்ற இருவரும் மலக்குகள் ஆகும், அவர்கள் மனித கோலத்தின் ஆடையோடு பூமிக்கு அனுப்பப்பட்ட போது உண்டார்கள்,குடித்தார்கள், ஏன் மருவவும் செய்தார்கள், இதே உண்ணல், பருகல், மற்றும் புணர்தலுக்கான சக்தியின் காரணமாக அவர்களுக்கு தண்டனைக்குரிய நிகழ்வுகளும் சம்பவித்தன, அவர்களின் உண்ணல், பருகல், போக ஆற்றல் உள்ளிட்ட யாவும் இந்த மனித ஆடைக்கான சட்டங்களாகும்.

ஹளறத் மலக்குல் மௌத் இஸ்றாயீல் அலைஹிஸ்ஸலாம் ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் மனித கோலத்தில் வந்த போது, அவர்களை நோக்கி ஓங்கி அறைந்தார்கள் அதனால் அவர்களுடைய ஒரு கண்ணில் பாதிப்பு ஏற்பட்டது, கண் பறிபோனது மனித சட்டங்களில் உள்ளதாகும், ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் தடி பாம்பான போது உண்ணவும், குடிக்கவும் செய்தது, இந்த உண்ணல் , குடித்தல் அது எடுத்த கோலத்தின் விளைவாகும்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

واوحينا الى موسى الق عصاك فاذا هي طلقف ما يأفكون.

உமது தடியை போடுவீராக! என்று மூஸாவுக்கு நாம் வஹி அறிவித்தோம், அப்போது அவர்களின் மாய வித்தைகளையெல்லாம் அது விழுங்கி விட்டது.7: 117

والقي ما في يمينك تلقف ما صنعوا

உமது வலக்கரத்திலிருப்பதை எறிவீராக! அது அவர்களின் வித்தைகளை யெல்லாம் விழுங்கிவிடும். 20: 69

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பஷரியத்தில் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சந்ததிகளில் உள்ளவர்கள், நூறானியத்தில் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களுக்கு நபியவர்கள் மூலமாகும், நூறானியத்தில் பிள்ளைப்பேறு, சந்ததி எதுவும் கிடையாது, ஈமான் நூறு , முஃமின் நூறானி ஆலம் பிரபஞ்சம் நூறானி , நுபுவ்வத் நூர், நபி நூறானி இவ்வாறு இருப்பதோடு முஃமினின் பிள்ளைகள் காபிராகவும் இருக்கின்றனர், ஆலிமின் பிள்ளைகள் ஜாஹிலாகவும் உள்ளனர், நபியின் பிள்ளைகள் காபிராகவும் கூட உள்ளனர்,

சொர்க்கவாதிகள் நூறானிகளாக இருப்பார்கள், ஹூறுல் ஈன்கள் நூர், சில சொர்க்கவாதிகள் பிள்ளை பெற ஆசைப்படுவார்கள், அவர்களுக்கு பிள்ளைகள் கிடைக்கும், என்று ஹதீது ஷரீபில் வந்துள்ளது, நூறுக்கு பிள்ளைகள் இல்லையென்றால், இந்த சொர்க்கவாதிகளான மனிதர்களுக்கு பிள்ளை எவ்வாறு வந்தது ?

குற்றச்சாட்டு: 5

قد جاءكم من الله نور وكتب مبين.

இத்திருவசனத்தில் வரும் و வாவு என்பது التفسير عطف ஆகும், இதன்படி நூர் என்பது திருக்குர்ஆனைக்குறிக்குமே தவிர, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்மவர்களைக்குறிக்காது, ஆதை مبين என்ற சொல் மூலம் புரிய முடிகின்றது,

பதில்: நிபுணத்துவமிக்க முபஸ்ஸிரீன்களிடத்தில் உ+மாக, ஜலாலுத்தீன் சுயூத்தி, தப்ஸீர் காஸீன், மதாரிக், தப்ஸீர் இப்னு அப்பாஸ், தப்ஸீர்ஸாவி இன்னும் இதுவல்லாத தப்ஸீர்களில் நூர் என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது, இத்திருவசனத்தின் ஆரம்பத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருப்புகழ் கூறப்படுள்ளது,

றப்புத்த ஆலா கூறுகின்றான்,

يا اهل الكتب قد جاءكم رسولنا يبين لكم كثيرا مما كنتم تخفون من الكتاب ويعفو عن كثير قد جاءكم من الله نور وكتاب مبين.

வேதக்காரர்களே! திட்டமாக நம்முடைய ரசூல் உங்களிடம் வந்துள்ளார்கள், வேதத்தில் நீங்கள் மறைத்த வையில் அதிக மானவற்றை உங்களுக்கு வெளிப்படுத்துகிறார்கள், இன்னும், அதிகமானவர்களை மன்னிக்கின்றார்கள், திட்டமாக அல்லாஹ்விடமிருந்து ஒளியும், இன்னும்,பட்டவர் தனமான வேதமும் உங்களுடன் வந்துள்ளன . 5:15

மேற்கண்ட திருவசனம் நூர் என்பதை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸலம் என்று குறிப்பிடுகின்றது, تفسير عطف என்று பொருள் கொள்வது இரவல் பொருள் مجازي معني எடுப்பது போன்றாகும், அவசியமில்லாமல் இரவல் பொருள் مجازي معني எடுக்கக்கூடாது, ஏனெனில் عطف معطوف عليه மீது வேற பாட்டை நாடும், ஆகவே, நூர் வேறு, கிதாப் வேதம் வேறு! மேலும் , التفسير عطف ல் كتب مبين என்பது تجديد புதிப்பிப்பதாகும், முந்திய விதத்தில் كتب مبين என்பதில் تأسيس உண்டு ! இன்னும் تاسيس என்பது تجديد ஐவிட மேலாகும், அதாவது, அடுத்த சொல்லுக்கு புதிதான பொருளைக்கொடுப்பது சிறப்பாகும், முதற் பொருளை மீண்டும் கூறத்தேவையில்லை, (இந்த விளக்கம் உலமாக்களுக்குரியது)

மேலும், இத்திருவசனத்திற்கான தப்ஸீராக பின்வரும் திருவசனம் அமைகின்றது,

يا ايها النبي انا ارسلناك شاهدا ومبشرا ونذيرا وداعيا الى الله باذنه وسراجا منيرة

நபியே! நிச்சயமாக நாம் சாட்சி பகிர்கின்றவராகவும், நன்மாராயம் கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிப்பவராகவும், இன்னும், அல்லாஹ்வின் கட்டளை படி அவனின் பக்கம் அழைக்கின்றவராகவும், பிரகாசிக்கும் சூரியனாகவும், உம்மை நாம் அனுப்பி வைத்துள்ளோம். 33: 45-46

இத்திருவசனத்தில் றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தெளிவாக ஒளிவிட்டுப்பிரகாசிக்கும் சூரியன் என்று கூறப்பட்டுள்ளது, திருக்குர்ஆன் கூறும் தப்ஸீர் அடுத்த தப்ஸீரை விட மேலாகும், மேலும் இத்திருவசனத்திற்கு மௌலவி அஷ்ரப் அலி தானவி நஷ்றுத்தீபி என்ற நூலில் மேற்கோளாகக் காட்டியிருக்கும் ஹளறத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலம் அப்துர்ரஸ்ஸாக முஸன்பில் பதிவு செய்திருக்கும் பின்வரும் ஹதீது தப்ஸீராக இருக்கின்றது

يا جابر ان الله تعالى خلق قبل الاشياء نور نبيك من نوره

ஜாபிரே! அல்லாஹுத்த ஆலா வஸ்த்துக்களைப் படைக்க முன் , தன்னுடைய நூறிலிருந்து உம்முடைய நபியின் நூறைப்படைத்தான்

மேலும், திருக்குர்ஆனுக்குரிய தப்ஸீரை திருக்குர்ஆனுக்குரியவர்களான றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களே கூறியிருப்பதுதான் உயர்ந்த கிதாபாகும், கிதாபைப் படிப்பதற்கு வெளிச்சமிருப்பது அவசியம், திருக்குர்ஆனின் வாசகங்களை பாராயணம் செய்வதற்கு வெளிப்படையான வெளிச்சம் தேவை, அவ்வாறுதான், திருக்குர்ஆனின் ஆழ்ந்த ஞானத்திற்கு றூஹானி நூர் அவசியமாகும், அந்த நூர்தான் றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமாகும்.

மலரும்....

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் 12

### குற்றச்சாட்டு : 6

திருக்குர்ஆனுக்கு [illegible] நல்லுரை கூறக்கூடியது, அல்லது, கடந்த கால , எதிர்கால விடயங்களை நினைவூட்டக்கூடியது, திருக்குர்ஆன் நூர், திருக்குர்ஆன் ஹிதாயத் திருக்குர்ஆன் புர்ஹான், திருக்குர்ஆன் ஷிபா, றஹ்மத் உள்ளிட்ட பெயர்கள் இருப்பதை திருக்குர்ஆனிலிருந்து புரிந்து கொள்கின்றோம், இவ்வாறான பண்புகள் திருக்குர்ஆனுக்கு இருக்கும் போது, இப்போது

மற்றுமொரு நூர், அல்லது மற்றுமொரு ஹிதாயத்திற்கான அவசியத்தேவை வரவில்லை; திருவசனங்களைக்கவனியுங்கள்.

1- ان هذه تذكرة ومن شاء اتخذ الى ربه سبيلا.

இந்த திருவசனங்கள் நல்லுரையாகும், எனவே, எவர் விரும்புகின்றாரோ அவர் தனது ரப்பின் பக்கமான வழியை எடுத்துக் கொள்ளவும்.73: 19

2- وانزلنا اليكم نورا مبينا

இன்னும், உம் பால் பகிரங்கமான நூறை இறக்கியுள்ளோம்

3- ذلك الكتاب لا ريب فيه هدى للمتقين

அது உன்னதமான வேதம்! அதில் ஐயத்திற்கான எந்த இடமும் இல்லை, அல்லாஹ்வை அஞ்சு பவர்களுக்கு அதில் நேர் வழி உண்டு. 2. :2

4- وننزل من القران ما هو شفاء ورحمة للمؤمنين.

ஈமான் கொண்டோருக்கு நோய் நிவாரணியும் ரஹ்மத்துமான வஸ்துவை திருக்குர்ஆனில் நாம் இறக்கி வைத்துள்ளோம். 17: 83

5- قد جاءكم برهان من ربكم

நிச்சயமாக, உங்களின் றப்பிடமிருந்து அத்தாட்சி உங்களிடம் வந்துள்ளது.

குற்றச்சாட்டு 7-

எனவே, மேற்கண்ட சிறப்புக்கள் யாவும் திருக்குர்ஆன் மூலம் கிடைது விட்டது, கிடைத்ததை கிடைப்பதாக மீண்டும் ஆக்கிக் கொள்வது تحصيل الحاصل சாத்தியமில்லை, ஆகவே, நபியில் இவற்றில் எந்த பண்பையும் ஏற்காமலிருக்க வேண்டும்.

(இக்குற்றச்சாட்டை தேவ்பந்தி ஐக்டாலவி கூறுகின்றார்.)

பதில்: திருக்குர்ஆன் இறுதி வேதம், அனைவருக்காகவும், அனைத்துலகுக்காகவும், எக்காலத்திற்குமாகவும் வந்துள்ளது, ஆகவேதான் இந்தச் சிறப்புக்கள் யாவும் இதிலிருக்கின்றன, மறதியாளர்களுக்கு நினைவூட்டல் تذكرة புத்தியுள்ளவர்களுக்கு நூர், வழிகேடர்களுக்கு வழிகாட்டல் هداية உடல், உள நோய்களுக்கு நோய்நிவாறனி, முஃமின்களுக்கு றஹ்மத், நிபுணத்தவமிக்க வர் محققين களுக்கு புர்ஹான் ஆக இருக்கின்றது .

இவ்வாறே நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அனைத்துலகுக்கும், எக்காலத்திற்கும் இறுதி நபியாகும், ஆகவே, படைப்பிலுள்ள ஒவ்வொரு வகையினர்களும் அன்னாரிடமிருந்து அருளைப்பெற்றுக்கொள்வதற்காக அந்த சிறப்புக்களும் அன்னாருக்கும்

இருக்க வேண்டும், ஆகவேதான் இந்த சிறப்புக்கள்யாவும் அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கும் இருப்பதாக அல்லாஹுத்த ஆலா

திருக்குர்ஆனில் கூறியுள்ளான்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் مذكر நல்லுரை கூறுபவர், அல்லது, முந்திய , பிந்திய விடயங்களைக் கூறுபவரும் கூட

فذكر فانما انت مذكر

எனவே, அவர்களுக்கு நல்லுரை கூறுவீராக! நீர் நல்லுரை கூறுபவராகும்,. 88: 21

2- انك تهدي الى صراط مستقيم

நிச்சயமாக நீர் நேரிய வழியில் நல்வழி காட்டுகின்றீர். 42 : 52

3- يا ايها الناس قد جاءكم برهان من ربكم وانزلنا اليكم نور مبينا

மனிதர்களே! நிச்சயமாக அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உங்களுடன் தெளிவான ஆதாரம் வந்துள்ளது, உங்கள் பால் பிரகாசமான ஒளியை நாம் இறக்கி வைத்தோம். 4 : 174

4- وما ارسلناك الا رحمة للعالمين.

அகிலத்தார்களுக்கு அருளாகவே அன்றி உம்மை நாம் அனுப்பவில்லை. 21 : 107

குறிப்பாக திருக்குர்ஆனின் பண்புகளுக்கு எல்லையில்லாதது போன்று திருக்குர்ஆனுக்குரிய நபிகள் நாயகத்தின் பண்புகளுக்கும் முடிவில்லை, கஃபா சட உடல்களுக்கு கிப்லா, றஸூலுளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மனம், ஈமான், உயிருக்கு கிப்லாவாகும், இதில் பெற்றதை மீண்டும் பெறுவது تحصيل حاصل என்பது அவசியமாகாது,

உலகத்தில் நாம் இரண்டிற்குமான தேவையுள்ளவர்களாகவே இருக்கின்றோம்,

1. கண் ஒளி
2. சூரியன், அல்லது விளக்கின் ஒளி

கண்ணில் ஒளியிருந்தும், விளக்கு உள்ளிட்டவையில் வெளிச்சம் இல்லையாயின், பார்வை வராது, இன்னும் விளக்கு உள்ளிட்டவையில் வெளிச்சமிருந்து கண்ணில் ஒளியில்லையாயின், எதுவும் துலங்காது, இவ்வாறுதான் திருக்குர்ஆன் விளக்கு அல்லது சூரியன் போன்றுள்ளது, ஸாஹிபுல் குர்ஆனாகிய நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கண்ணொளி போன்றவர்கள், அல்லது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு வஸல்லம் சூரியன், சந்திரன், திருக்குர்ஆன் கண்ணொளியாகும்.

எமக்கு திருக்குர்ஆனின் ஒளியும் அவசியம் வேண்டும், இன்னும் நுபுவ்வத்தின் ஒளியும் வேண்டும், தொழுகை திருக்குர்ஆன் மூலம் கிடைத்தது, ஆனால்,

தொழுகையின் எண்ணிக்கை றகாஅத்துக்களின் அளவு, தொழுகைக்கான முறை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களினால்தான் கிடைத்தது,

இவ்வாறுதான் ஸகாத்தையும், ஹஜ்ஜையும் இன்னும் இவை தவிர்ந்தவையையும் திருக்குர்ஆன் தான் தந்தது, ஆனால், அதை நிறைவேற்றும் முறையை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்தான் கற்றுக்கொடுத்தார்கள், இதில் கிடைத்ததை மீண்டும் பெறுவதோ تحصيل حاصل அல்லது வேறு ஏதும் குறைகளோ கிடையாது, நுபுவ்வத்தின் ஒளியின் தேவை திருக்குர்ஆனின் ஒளிக்கு முந்தியதாகும், ஆகவேதான் காபிருக்கு கலிமாச் சொல்லிக் கொடுத்து முஸ்லிமாக்கப்படுகின்றது, தவிர, திருக்குர்ஆனை ஓதிக்கொடுத்தல்ல! மதளைக்கு காதில் அதான் கூறப்படுகின்றதே தவிர, திருக்குர்ஆன் ஓதுவதில்லை.

குற்றச்சாட்டு. : 9

اللهم اجعل في بصري نورا

யாஅல்லாஹ்! எனது பார்வையில் ஒளியை ஆக்குவாயாக!என்றும்,

وجعلني نورا

யாஅல்லாஹ்! எனது கண்ணில், காதில், சதையில், எலும்பில் நூறை ஏற்படுத்துவாயாக! இன்னும், என்னை நூறாக்குவாயாக! என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் துஆச்செய்ததாக ஹதீது ஷரீபில் வந்துள்ளது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் ஆரம்பத்திலேயேயிருந்து நூறாக இருந்திருந்தால், இந்த துஆவுக்கான அவசியம் எதற்கு? ஆரம்பத்தில் நூறாக அன்னார் இல்லாதிருந்தால்தானே நூறாக ஆக்கவேண்டும் .

பதில்:  இதற்கு இருவிதமான பதில்கள் உள்ளன.

1. வாயடைக்கச் செய்யும் الزامي பதில்
2. நிபுணத்துவமானது تحقيقي பதில்

1-வது பதில்: நீங்கள் தினமும்

اهدنا صراط المستقيم

யாஅல்லாஹ்! எமக்கு நேரான வழிக்குரிய ஹிதாயத்தை தருவாயாக! என்று கேட்கின்றீர்கள் என்றால், நீங்கள் வழிகேட்டிலா இருந்தீர்கள்? நீங்கள் முதலிலேயே ஹிதாயத்திலிருக்கையில் மீண்டும் எதற்காக ஹிதாயத்தைக் கேட்கின்றீர்கள்?

றப்புத்த ஆலா கூறுகின்றான்.

هدى للمتقين

இந்தத் திருக்குர்ஆன் பயபக்தியாளர்கு ஹிதாயத் கொடுக்கக்கூடியது. 2: 2

يا ايها الذين امنوا امنوا

ஈமான்கொண்டவர்களே! ஈமான்கொள்ளுங்கள்.

முதலிலேயே பயபக்தியாளராக ஆகிவிட்டதன் பின், அவர்களுக்கு ஹிதாயத் கொடுப்பதற்கான பொருள் என்ன? இன்னும், முதலில் ஈமான் கொண்டதன் பின், அவர்கள் மீண்டும் ஈமான் கொள்வதற்கு என்ன பொருள்?

2-வது பதில் :

யாஅல்லாஹ்! எனது கண், காது உள்ளிட்டவையில் நூறைத்தருவாயாக! என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் துஆக்கேட்டது உம்மத்துக்காகும் , நூறானியத்தில் நிலைத்திருப்பதற்கான துஆவாகும்.

குற்றச்சாட்டு : 9

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்று கூறுவது அன்னாருக்கு அவமரியாதையாகும்,

அன்னார் மண்ணினால் படைக்கப்பட்டவர்கள் என்பதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு கண்ணியமுண்டு, ஏனெனில் மண் நூறை விட சிறப்பானதாகும், ஏனெனில், மலக்குகள் நூர், ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் மண்ணால் படைக்கப்பட்ட மனிதர், மலக்குகள் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஸஜதாச் செய்தார்களே தவிர, ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் மலக்குகளுக்குச் ஸஜதாச் செய்ய வில்லை, எனவே றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்று நம்புவது அன்னாரை அவமானப்படுத்துவதாகும், நூர் ஸுஜூது செய்யக்கூடியது, மண் ஸுஜூது செய்யப்பட்டது.

பதில்: இந்த குற்றச்சாட்டுக்கும் இருவிதமான பதில்கள் உள்ளன.

1. வாயடைக்கும் الزامي பதில்.
2. நிபுணத்துவ تحقيق பதில்.

1-வது பதில் : பின்னர், அல்லாஹ்வுக்கு நூர் என்பதே, அல்லாஹுத்த ஆலாவுக்கும், திருக்குர்ஆனுக்கும் அவமானமாகும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்பதால் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு அவமானமாகத் தெரியுதென்றால், அல்லாஹ்வுக்கு நூர் என்பதால் அனைத்து அவமானத்தையும் மிஞ்சிவிடுமே!

மாஷாஅல்லாஹ்! றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு காபிராகுமளவுக்கு அவமரியாதை செய்த தேவ்பந்தி வஹாபிகளும் கூட ஒழுக்க சீலர்களாகிவிட்டர்கள்..

**2வது பதில்:** மலக்குகள் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களுக்கு ஸஜதாச்செய்தது அன்னாரின் சட உடலுக்கானதல்ல, அவர்களின் உடலுக்குள் ஊதப்பட்ட நூறானிய்யத்தான றூஹுக்குரியதாகும்,

றப்புத்த ஆலா கூறுகின்றான்.

فاذا سويته ونفخت فيه من روحي فقعوا له ساجدين

அதை நான் நிரப்ப மாக்கி,அதில் எனது புனித றூஹையும் ஊதியபோது, அதற்கு நீங்கள் சுஜூது செய்தவர்களாக விழ வேண்டும். 15 : 29

ஸஜதா ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குரிய றூஹுக்குரியது என்பது தெரிய வந்துள்ளது, சங்கையான திருவுடல் அந்த றூஹுக்கு தஜல்லியாக ஆகிவிட்டது ஆகவேதான் அதற்கும் சேர்த்து ஸஜதா ஆனது, இன்னும், ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் றூஹ் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூறின் ஒரு தஜல்லியாகும், ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் திவுடலில் றூஹ் ஊதப்படுவதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே மண்ணாலான அன்னாரின் திருவுடல் படைக்கப்பட்டுள்ளது, ஸஜதா திருவுடலுக்கு மட்டுமாக இருந்தால், இவ்வளவு காலம் தாமதிக்க வேண்டிய தேவை இல்லையே! றூஹ் ஊதமுன்பே ஸஜதா நிகழ்ந்திருக்குமே! இப்லீஸுக்கு மண்ணின் மீது, மண்ணிலே மண்ணின் பக்கம் ஸஜதாச்செய்வதில் ஒருபோதும் குறையிருந்திருக்காது, ஏனெனில் இதற்கு முன் பூமியில் ஒவ்வொரு அங்குலத்திலும் ஸஜதாச் செய்திருக்கின்றான், இப்பவும் கூட ஒரே ஒரு ஸஜதாச்செய்தாலே போதுமாக இருந்திருக்கும்,

எதார்த்தத்தில் ஸஜதாவுக்குக் காரணமான அந்த நூறானியத்தின் மறுப்பாளனாக ஆனதால்தான் இப்லீஸ் ஸஜதாச்செய்ய மறுத்தான். மேலும், வெறும் மண்ணைச் ஸஜதாச் செய்வதாயின், மண்மேடுகள் ஆயிரம் இருக்கின்றன, அதில் ஏதாவதொன்றை முன்நோக்கி ஸஜதாச்செய்யலாம், இதிலிருந்து ஸஜதாச் செய்யப்பட்டது மண்ணல்ல! ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களில் பாதுகாப்பாக ஒப்படைக்கப்பட்டிருந்த நூறுக்குத்தான் ஸஜதாச் செய்யப்பட்டது.

தொடரும்...

**அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் ( 13 )**

**குற்றச்சாட்டு: 10**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூறாக இருந்தால், அன்னார் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களின் சந்ததில் வந்தது எப்படி? நூர் எவருக்கும் சந்ததியாவதில்லையே! றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை இதன் காரணமாகத்தானே மனிதர் என்று கூறப்படுகின்றது.

பதில்: றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூறும்தான், பஷர் - மனிதரும்தான், அதாவது நூறானி - ஒளிமயமான மனிதரும்தான்- என்று ஏலவே கூறியுள்ளோம், அன்னாரின் புறத்திருமேனி பஷர் - மனிதர், இன்னும், ஹகீகத்- எதார்த்தம் - நூர், ஆதத்தின் பிள்ளைகளாவது, அந்த மனித திருமேனிக்கான பண்பாகும், ஹகீகத்தின் தரப்பைக் கவனித்தால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முழுப்பிரபஞ்சத்திற்கும் மூலமாகும், முழு பிரபஞ்சமும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிலிலிருந்து வந்ததாகும்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்,

1- قل ان صلاتي ونسكي ومحياي ومماتي لله رب العالمين لا شريك له وبذلك امرت وانا اول المسلمين

நிச்சயமாக என்னுடைய தொழுகையும், இன்னும், என்னுடைய குர்பானிகளும், எனது வாழ்வும், மரணமும் அகிலங்களைப் படைத்து போஷிக்கும் ரப்புக்காக இருக்கும் என்று கூறுவீராக ! 6: 162

2- قل ان كان للرحمن ولد وانا اول العبدين

சாத்தியமேயில்லை, ஒருக்கால் ரஹ்மானுக்கு ஏதும் குழந்தை இருக்குமாயின், முதன் முதலில் நானே தான் வணங்குவேன் என்று கூறுவீராக! 43: 81

و ان من شيء الا يسبح بحمده ولكن لا تفقهون تسبيحهم

அவன் புகழ் கூறி அவனைத் துதிக்காத எப்பொருளும் கிடையாது!, ஆயினும், அவற்றின் தஸ்பீஹை நீங்கள் புரிய மாட்டீர்கள். 17: 44

மேற்கண்ட திருவசனங்களிலிலிருந்து இரு விடயங்கள் தெரிய வருகின்றன,

1- பூமியிலுள்ள ஒவ்வொரு அணுவும், ஒவ்வொரு பகுதியும், வானத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் தஸ்பீஹ் செய்கின்றன, இன்னும், றப்பை வணங்கின்றன,

2- இவ்வனைத்து பொருட்களுக்கு முன்பும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் றப்பை வணங்கிக்கொண்டிருந்தார்கள், அப்போது மலக்கில்லை, வானமில்லை, பூமியில்லை, பிரபஞ்சத்தின் எப்பொருளுமில்லை; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு முன், அவையிருந்திருப்பின், அவைதான் முதலில் றப்பை வணங்கியிருக்குமேதவிர றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களல்ல;

மனிதனின் ஆரம்பம் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களிலிலிருந்துதான் தொடங்குகின்றது என்பது திட்டவட்டமான உண்மை!, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முதலிலே மனிதராக இருந்திருந்தால், ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் முதல்மனிதர் என்றோ, மனிதர்களின் தந்தை அபுல் பஷர் ஆகவோ இருக்க முடியாது, ஆகவே, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முதலில் நூறாகவே

இருந்தார்கள் என்பதை ஏற்றுத்தான் ஆக வேண்டும், இந்த உடலிலின் தரப்பில் மனிதர், சொந்த பந்த உறவுகள் யாவும் புனித இந்த திருவுடலுக்குரியதாகும்,

ஹளறத் ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் தங்களின் "அத்தஃலீப் கல்புல் அலீப்" என்ற நூலின் ஆரம்பத்தில் இவ்வாறு கூறுகின்றார்கள்,

ஆலமுல் அர்வாஹில் அனைத்து நபிமார்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றூஹிலிலிருந்து அருளைப் எடுத்துக்கொண்டு அன்னாரிடமிருந்தே அறிவைப் பெற்றுக்கொண்டார்கள், இன்னும், ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் கற்றுத்தான் திருநாமங்களைப் பற்றிய ஆலிமானார்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ல்லம் இந்த உலகில் நபிமார்களுக்கும் நபியாகும், கற்றுக்கொண்ட நபிமார்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சீடர்களாவார்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அவர்கள் அனைவருக்கும் முதல் ஆசானாகும்,

كنت نبيا وادم بين الروح و الجسد

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் றூஹுக்கும், உடலுக்குமிடையிலிருக்கையில் நான் நபியாக இருந்தேன் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களே கூறியுள்ளார்கள்; அனைத்து மலக்குகளும், ஜோதி உலகத்தைச் சேர்ந்த அனைவரும் அறிந்தவையாவும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கற்பித்தலால் பெற்றுக்கொண்டவையாகும்;

மேற்படி நூலில் குறிப்பிடப்பட்டுள்ள சொற்றொடர் வருமாறு,

இந்த உலகத்திற்கு வருகை தந்த அனைத்து நபிமார்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஞானபீடத்திற்குச் சமூகமளித்து அன்னாரின் மாணவர்களாக இருந்துள்ளனர், ஒவ்வொரு நபியும் அறிவுக்கான ஒவ்வொரு ஏட்டையும், மற்றும் தீனுக்கான ஒவ்வொரு அத்தியாயத்தையும் அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடமே கற்றார்கள், அங்கிருந்து வெளியேறி உலகத்திற்கு அருள்பாலிக்கும் தகுதியோடு வருகை தந்து அல்லாஹுத்த ஆலாவின் சட்டங்களை மனிதர்களுக்குக் கற்றுக்கொடுத்துள்ளனர்.

இந்த நபிமார்களில் முதல்வராக ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் இருந்தார்கள், இவர்கள் தந்தை என்ற அந்தஸ்த்தில் இருந்து கொண்டே தனது சத்திய சீலரான மகனின் மத்ரஸாவில் ஒழுக்கத்தோடு இருகால்களையும் மடித்திருந்து அனைத்து மொழிகளையும், இன்னும் பொருட்களுக்கான பெயரையும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடமிருந்து கற்றார்கள், பின்னர், அல்லாஹ்வின் கலீபா என்ற உன்னத பதவியையும் பெற்று முகர்ரபான மலக்குகளுக்கு கற்றுக்கொடுத்து

**பயிற்சியும் வழங்கினார்கள், இதன்மூலம் அனைத்து மலக்குகளுக்கும் ஆசிரியர் என்பது நிரூபணமானது, இறுதியாக மலக்குகள் அவர்களுக்கு சஜூது செய்தார்கள்.**

## குற்றச்சாட்டு 11

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நூறாக இருந்தால், அன்னார் பசியின் கடுமையால் மணிவயிற்றில் கல்லை எதற்காகக் கட்டினார்கள்? இன்னும், அன்னாருக்கு தேளின் விஷம் எப்படி தாக்கம் செலுத்தியது? சூனியம் எப்படிப்பலித்தது? சில நபிமார்களை காபிர்கள் எவ்வாறு கொலை செய்தார்கள்? உஹது சமர்களத்தில் அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாறக்கான பல் ஏன் ஷஹிதானது? என்னே நூறுக்கும் பசியெடுக்குமா? நூறில் விஷம் தாக்கம் செலுத்துமா?**

**பதில்: நாம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பஷரியத்தை மறுப்பதாக இருந்தால்தான் இது போன்ற நூற்றுக்கணக்கான குற்றச்சாட்டுக்களை அடுக்க முடியும், அண்ணலம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பஷறும்தான், நூறும்தான் என்றுதான் கூறுகின்றோம், சில வேளை அன்னாரில் மனிதத்துவ பண்புகள் வெளியாகும், மற்றும் சில வேளைகளில் நூறானியத்தின் பண்புகள் வெளியாகும், றப்புத்த ஆலா அன்னாரை அனைத்து பண்புகளின் மொத்தமாகப் படைத்துள்ளான்.**

**வழக்கமான உணவு கிடைக்காத போது,மணிவயிற்றில் கல்லைக்கட்டுவார்கள், இன்னும், பசியின் சாயலையும் உணர்வார்கள், ஆயினும் தொடர் நோன்புக்காக நிய்யத் வைத்துக் கொண்டால், உண்பதைத் தவிர்ப்பார்கள், பல மாதங்கள் உண்ணாவிட்டாலும் எத்தாக்கமும் நிகழ்வதில்லை, அங்கே பஷரியத்தின் தாக்கம், இங்கே நூறானியத்தின் தாக்கம், இங்கே தேளின் விஷம், வாள், நெருப்பு உள்ளிட்டவை அதன் தாக்கத்தைக் காட்டியது, ஆனால் மிஃறாஜ் இரவில் நரகத்தைக் கடந்து சென்றார்கள் அங்கும் அக்கினி, சர்பம், தேள் உள்ளிட்ட யாவும் இருக்கின்றன, ஆனால் ,எதுவும் தாக்கவில்லை, முதற்தாக்கத்தில் பஷரியத்தும், பிந்தியதில் நூறானியத்தும் இருந்தன,**

**இப்போது ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் பல நூறாண்டுகள் விண்ணில் உயிரோடு வாசம் செய்கின்றார்கள்,அங்கு ஆகாயமில்லை, ஆகாரமுமில்லை, குடிபானமுமில்லை, ஆனாலும் உயிரோடுதானிருக்கின்றார்கள், இந்த வாழ்வு நூறானியத்தின் வெளிப்பாடாகும்.**

**மாண்பு மிகு நபிகள் நாயகத்தின் தகுதி சாயுச்சமானது, அன்னாரின் தொண்டர்களான சில வலிமார்கள் மாதக்கணக்கில் உண்ணல் பருகலின்றி இருந்துள்ளார்கள், அவர்களின் திரேகத்தில் வாள் பதம் பார்ப்பதில்லை, தஜ்ஜால் வெளியாகும் காலத்தில் முஃமின்களுக்கு அல்லாஹுத்த ஆலா வின் திக்றின் மூலமாக பசி தாகத்திலிருந்து பாதுகாப்பு கிடைக்கும், ஒரு நல்லடியாரை தஜ்ஜால் ஒரு தடவை கொன்று, மீண்டும் அவரை உயிர்ப்பிப்பான், பின், மறுமுறையும் கொல்ல முயல்வான், அவரின் கழுத்தில் கத்தி**

வேலைசெய்யாது, இவர் நுபுவ்வத் என்ற சூரியனின் ஒரு கதிர்தான், அப்படியாயின், சூரியனைப்பற்றி என்னதான் சொல்ல இருக்கின்றது?

ஹளறத் ஷைகு ஸஃதி றஹ்மதுல்லாஹி அலைஹி மிக அழகாகக் கூறுகின்றார்கள்,

گہے باحفصہ و زینب پیر داختے

دگھا ہے با جبریل ومیکیل نہ ساختے

சில வேளை தங்களின் பரிசுத்தமான மனைவிமார்களோடு உறவாடுவார்கள், இன்னும், சில வேளை ஹளறத் ஜிப்ரீயீல், மீக்காயீலுக்கும் அன்னாரை நெருங்க முடியாது.

மாறுபட்ட நிலைகளில் வேந்தருக்கு மாறுபட்ட வெளிப்பாடுகளிருக்கும், ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ் ஸலாமவர்களுக்கு சில வேளை அக்கினியும், ஹளறத் இஸ்மாயீல் அலைஹிஸ் ஸலாமவர்களுக்கு சில வேளை கத்தியும் தாக்கம் செய்யவில்லை யென்பதை நீங்கள் கேள்விப்படவில்லையா? இவை அந்த பெரியவர்களின் நூறானியத்தின் வெளிப்பாட்டில் நடந்தவை

ஆக, நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் நூறாகும், அன்னாரின் திருமேனி ஜோதிமயமானது, அன்னாரின் திருமேனியின் நூறானியத் ஹளறத் ஜிப்ரீயீல் அலைஹிஸ் ஸலாமவர்களின் நூறானியத்தைவிட எவ்வளவோ மேலானது, உயர்வானது .

மலரும்.....

## அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் ( 14 )

### குற்றச்சாட்டு : 12

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூறாக இரூந்தால் அன்னாரின் அனைத்து பிள்ளைகளும் கியாமத் நாள் வரை ஸெய்யித் நூறாகவேதானே இருக்க வேண்டும்? ஏனெனில் பிள்ளைகள் பெற்றோரின் இனத்தில்தானே வருவார்கள், மனிதனின் பிள்ளை மனிதன், சிங்கத்தின் குட்டி சிங்கம், அவ்வாறுதான் நூறுக்குரிய பிள்ளைகள் நூறுதான், அனைத்து ஸெய்யிதுகளேம் நூர் இல்லாதிருக்கும் போது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நூறானது எப்படி?

பதில்: இதற்கான பதில் ஏலவே கூறப்பட்டுள்ளது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இந்த அனைத்து உறவுகளும் மனிதர்களுக்குரியது, நூறானியத்தில் எவரிலும் எவருக்கும் உறவில்லை, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இந்த நூறானியத்தில் எவருடைய பிள்ளைகளிலுமில்லை, எவருக்கும் பிதாவுமில்லை, எவருடைய நெருங்கிய உறவு முறையிலுமில்லை,நூறானியத்தான ஜோதி உலகம் வெகு உயர்ந்து ,

எந்த ஒரே றூஹும் எவருக்கும் பிள்ளையாகவோ, அஸலாகவோ ஆவதில்லை, ஏனெனில், பிள்ளைகள் றூஹானியின் பண்புகளில் மாதா, பிதாவுக்கு மாற்றமாகவும் கூட ஆகிவிடுவதுண்டு, நபியின் பிள்ளை காபிர், ஆலிமின் பிள்ளை ஜாஹில் , ஜாஹிலின் பிள்ளைகள் ஆலிமாக ஆகுகின்றனர், ஆக, பிள்ளைகள் பஷரியத்திற்குரியது, நூறானியத்திற்குரியதல்ல!

குற்றச்சாட்டு: 13

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு தன்னுடைய நுபுவ்வத்திற்கு முன்பு ஈமான், திருக்குர்ஆன் பற்றித் தெரியாதிருந்தது, வஹி வருவதற்கு முன் தனது நபித்துவத்தெளப்பற்றிய நம்பிக்கைகூட இருக்க வில்லை, என்பதை திருக்குர்ஆன் மூலம் அறியமேடிகின்றது, இவ்வாறிருக்கு அன்னார் ஆலமுல் அர்வாஹில் நபியாக இருந்தார்கள் என்பதும், ஏனைய அனைத்து நபிமார்களும் அவர்களிடமிரேந்தே அருளைப்பெற்றனர் என்பதும் எப்படி சரியாகும்?

திருக்குஆன் கூறுவதைக் கவனியுங்கள்.

1- وما كنت ترجو ان يلقي اليك الكتاب الا رحمة من ربك

உம்மீது வேதம் இறக்கப்படுவதை நீர் எதிர்பார்த்தவராக இருக்கவில்லை, உம்முடைய ரப்புதான் ரஹ்மத்தை அருளினான், எனவே, காபிர்களுக்கு உதவியாளர்களாக நீர் இருக்க வேண்டாம். 28: 86

2- وما كنت تدري ما الكتاب ولا الايمان

இதற்கு முதல் வேதத்தையோ சரீரத்தின் சட்டங்களின் விபரங்களையும் நீர் அறிந்திருக்கவில்லை.43: 52

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு ஈமானைப்பற்றிய அறிவே இல்லாதிருக்கும் போது, பிறப்பிற்கு நுபுவ்வத் இர்ந்தது என்பதற்கு என்ன பொருள்?

பதில்: இந்த குற்றச்சாட்டுக்கே இருவிதமான பதில்கள் உள்ளன,

1. மடக்கும் الزامي பதில்,
2. நிபேணத்துவ تحقيقي பதில்

1 வது பதில், அவ்வாறாயின், ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைவிட மேலாகிவிடுவார்களே! அன்னார் பிறந்து சில மணித்துளிக்குள் தாயின் மடியிலிருந்தே கொண்டே சமுகத்தைப் பார்த்துக் கூறினார்கள்.

قال اني عبد الله اتاني الكتاب وجعلني نبيا

நான் அல்லாஹ்வின் அடிமை! அவனே தான் எனக்கு வேதத்தை கொடுத்தான்,

என்னை மறைவான விடயங்களைக் கூறும் நபியாக ஆக்கினான் . 19: 30

இவ்வாறே ஹளறத் யஹ்யா அலைஹிஸ்ஸலாமவர்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை விட உயர்ந்துவிடுவார்கள்.

இவர்கள் தொடர்கள் றப்புத்த ஆலா கூறுகின்றா

واتيناه الحكم صبيا

நாம் அவருக்கு சிறு பராயத்திலேயே அறிவை (அல்லது,நுபுவ்வத்தை) வழங்கினோம் . 19: 12

இதுமட்டுமல்ல காபிர்கள் கூட றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை விட அறிவில் உயர்ந்து விடுவ்ர்கள், ஏனெனில் அவர்கள் சிறு வயது முதலே அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நபி என்று அறிந்து வைத்திருந்தனர், புஹைறா என்ற கிறிஸ்த்தவ பாதிரியார் சிறு வயதிலேயே நபிகளாரின் நுபுவ்வத்தைப் பற்றி சாட்சி பகர்ந்தார்கள், ஏனெனில், கல்லும், மரமும் கலிமாவை மொழிந்ததை அவர் செவிமடுத்தார்,

திருக்குர்ஆன் கூறுகின்றது.

يعرفونه كما يعرفون ابنائهم

இந்த காபிர்கள் தங்களின் பிள்ளைகளை அறிந்திருந்தது போன்றே நபிகளாரை அறிந்திருந்ஊனர் . 2: 146

தந்தை குழந்தை பிறந்ததிலிருந்து பிள்ளையை அறிவ்திருப்பார், அவ்வாறுதான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிறந்ததிலிருந்து காபிர்கள் நபியவர்களை அறிந்திருந்தனர்,

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وكانوا يستفتحون على الذين كفر ا

2:89- இதற்கு முன் தனது நபியின் பொருட்டை கொண்டு காபிர்களுக்கு எதிராக வெற்றியே போண்டினர் ..

மேலும், வஹி வருவதற்கு முன், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹிறா குகையில் இபாதத் செய்துள்ளார்கள், இன்னும், ஆரம்பத்திலிருந்தே இஃதிகாபை ஆரம்பித்துள்ளார்கள் என்று புகாரி ஷரீபில் பதிவாகியிருக்கின்றது, நபியவர்களேக்கு ஈமானைப் பற்றிய அறிவில்லாதிருந்தால் இந்த இபாதத்துகளை யாருக்குச் செய்தார்கள்,? எவ்வாறு செய்தார்கள்?

மேலும் மிஃறாஜுடைய இரவில் பைத்துல் முகத்தஸில் அனைத்து நபிமார்களுக்கும் தொழுவித்தார்கள் இந்த நேருத்தில் தொழுகை பர்ளாக இரேக்க வில்லை , அப்படியாயின் அது எவ்வாளான தொழுகை?

2வது பதில்:

1- ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள்.

மேற்படி திருவசனத்தில் வெளிப்படையாக முன்னோக்கிக் கூறுவது எம்பெருமானார் றஸூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைத் தான், ஆனால், எதார்த்தத்தில் அண்ணலாரின் மார்க்கத்தைச் சேர்ந்தவர்களையாகும்,

தப்ஸீர் மதாரிக், தப்ஸீர் காஸினில். و ما كنت ترجو என்ற திருவசனத்தின் அடியில்,

قال ابن عباس الخطاب في الله في للنبي صلى الله عليه وسلم والمراد به اهل دينه.

ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள்,

வெளிப்படையில் இந்த ப்பேச்சு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பார்துள்ளது, இதன் நோக்கம் அன்னாரின் உம்மத்தினர்களாகும்.

2- இத்திருவசனத்தின் மறுப்பு نفى என்பது الا رحمة என்ற சொற்றொடர் மூலம் தகர்க்கப்பட்டுள்ளது , இதன்படி இத்திருவசனத்தின் பொருள் இவ்வாறு வரும்,

வெளிப்படையான காரணங்கள்படி, அல்லாஹ்வின் றஹ்மத்தின்றி உங்கள் மீது வஹி வரும் என்ற நம்பிக்கைகூட இல்லாதிருந்தது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு அல்லாஹுத்த ஆலாவின் தனிப்பெரும் கிருபையினால் மட்டுமே நுபுவ்வத் கிடைத்ததென்பதும், எந்த ஒரு நபியின் திருத்தூதரின் துஆவினாலோ, இன்னும் எந்த ஒரு நபியின் அனந்தரத்திலிருந்தோ கிடைக்க வில்லையென்பது வெளிப்படையானதுதான்,

ஹளறத் ஹாறூன் அலைஹிஸ் ஸலாமவர்களுக்கு ஹழறத் மூஸா அலைஹி ஸ்ஸலாமவர்களின் துஆவால் நுபுவ்வத் கிடைத்தது, ஹளறத் யஹ்யா அலைஹிஸ் ஸலாமவர்களுக்கு ஹளறத் ஸகரிய்யா அலைஹிஸ் ஸலாமவர்களின் அனந்தரத்தால் நுபுவ்வத் கிடைத்தது, ஹளரத் சுலைன் அலைஹிஸ் ஸலாமவர்களுக்கு ஹளறத் தாவூத் நபி அலைஹிஸ் ஸலாமவர்களின் வாரிசால் நுபுவ்வத் கிடைத்தது.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

1- ووورث سليمان داوود

ஹளரத் சுலைமான்ஹளறத் தாவூதுக்கு வாரிஸாக ஆனார்.

2- واجعل لي وزيرا من اهلي هارون اخي اشتد به ازري

யா அல்லாஹ்! எனது சகோதரர் ஹாரூனை எனது அமைச்சராக ஆக்கி வைப்பாயாக! என்று மூஸா அலைஹிஸ்ஸலாம் துஆக் கேட்டார்கள்.

ஆனால் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குரிய நுபுவ்வத்தில் எவருடைய துஆவும், எவருருடைய அனந்தரமும் தொடர்பாக இருக்கவில்லை, இன்னும், நுபுவ்வத்தில் எவருக்கும் நபியவர்கள் கடமைப்பட்டவர்களாக இல்லை,

2வது திருவசனமான

وما كنت تدري ما الكتاب

என்பதில் புத்தி தொடர்பானதிற்கு மறுப்புள்ளது, دراية என்பது புத்தியால் கிரகிக்கும் விடமங்களுக்குக் கூறப்படும், அதாவது, நுபுவ்வத் வெளிவர முன் ஈமானையும், நுபுவ்வத்தையும் அனுமானத்தாலும், புத்திபூர்வமாகவும் நீங்கள் அறிந்திருக்கவில்லை, ஏனெனில், அனுமானத்தால் எழும் ஞானம் சிலவேளை பிழையாகவும் போகும், எனினும், நுபுவ்வத்தை இறை உதிப்பின் வஹி மூலமாக அறிந்திருந்தார்கள், இதில் தப்புத்தவறு வராது, அல்லது, இத்திருவசனத்தின் நோக்கம் வேதம், ஈமான் உள்ளிட்டவையின் விரிவான விளக்கமாகும், அல்லது , ஈமான் என்பது ஈமானுடையவர்கள் ஆக, இவ்வாறு நிறையவே பதில்கள் உள்ளன

குள்றசாட்டு: 14-

ஹிறா குகையில் நபியவர்கள் மீது முதல் வஹி أقرا باسم ربك الذي خلق

உமது றப்பின் திருநாமத்தால் ஓதுவீராக! என்ற திருவசனம் வந்த போது, நபியவர்களால் ஹளறத் ஜிப்ரீயில் அலைஹிஸ் ஸலாமவர்களை புரிந்து கொள்ள முடியவில்லை, வறக்கத் இப்னு நௌபல் கூறியதை வைத்தே வந்தவர் ஹளறத் ஜிப்ரீயில் அலைஹிஸ்ஸலாம் என்பதை புரிந்து கொண்டார்கள் என்பதை புகாரி ஷரீபின் ஆரம்பத்திலுள்ள அறிவிப்பின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது, இவ்வாறு இருக்கையில், நபியவர்கள் தனது நுபுவ்வத்தை முதலிலேயே அறிந்திரேந்தார்கள் என்பது எப்படி சரியாகும்?

**பதில்:** இது முற்றிலும் தவறு! றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாமவர்களை அறிந்திருக்கவில்லை என்ற பொருள் கொண்ட எந்தவொரு வார்த்தையும் புகாரி ஷரீபின் அந்த அறிவிப்பில் காணப்படவில்லை, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹளறத் ஜிப்ரீயீல் அலைஹிஸ் ஸலாமவர்களை அறிந்திருக்காவிட்டால் இந்த திருவசனம் திட்டவட்டமானதாக இருக்க முடியாது, அல்லாஹ்வின் பேச்சில் எந்த விதமான சந்தேகமும் வராத போதுதான் அக்கூற்று திட்டவட்டமானதாக இருக்கும்,

ஹிறா குகையில் வந்தவர் ஹளறத் ஜிப்ரீயீல் அலைஹிஸ் ஸலாமா? அல்லது வேறு நபரா ? என்பதை நபியவர்களால் அறந்திருக்க முடியவில்லையென்றால், இது அல்லாஹுத்த ஆலாவின் பேச்சுத்தான் என்பதைக்கூட அறிந்திருக்க முடியாது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கே இத்திருவசனம் அல்லாஹ்வின் பேச்சு என்பத ல் சந்தேகமிருக்குமாயின், எமக்கு

உறுதி- யகீன் - எந்த வகையிலும் ஏற்படமாட்டாது, ஏனென்றால் நமது உறுதி - யகீன்- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் உறுதியில்தான் தங்கியிருக்கின்றது,

ஆகவேதான் இந்த நேரத்தில் யார் நீங்கள்? எதை ஓத வேண்டும் என்று என்னிடம் எதிர்பார்க்கின்றீர்கள்? என்று கேட்க வில்லை, இதிலிருந்து வந்தவர் ஹளறத் ஜிப்ரீயீல் அலைஹிஸ் ஸலாம் என்பதை நபியவர்கள் அறிந்திருந்தார்கள், ஹளறத் ஜிப்ரீயீல் அலைஹிஸ் ஸலாமவர்களும் முழுப்பிரபஞ்சமும் நபிகளாரின் நூறிலிருந்தே உண்டாகியிருக்கும் போது எவ்வாறு அவரை நபிகளால் அறியாதிருக்க முடியும்? இன்னும், நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூர் இவர்களுக்கே முன்பே படைக்கப்பட்டுள்ளது,

வறக்கத் இப்னு நௌபலிடம் போனதே, அவரிடம் இந்த விடயத்தை எடுத்துக்கூறியது, அடுத்தவர்கள் உண்மைப்படுத்துவதற்காகும், இதைக் கேட்பவர்கள் வறக்காவின் உரையைக்கேட்டு நபிகளாரின் நுபுவ்வத்தில் மைலதிகமாக மன நிம்மதி பெறுவார்கள், ஏனெனில் வறக்கா தௌறாத் வேதத்தை அறிந்த மிகப் பெரிய அறிஞராவார், மக்கத்து மக்கள் அவரின் அறிவுப் புலமையில் ஆழ்ந்த நம்பிக்கை வைத்திருந்தனர், அவரில் முழு நம்பிக்கை வைத்திருந்தனர்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தங்களின் மனைவி அன்னை கதீஜா றழியல்லாஹு அன்ஹா அவர்கள் சகிதம் வறக்காவிடம் சென்றது தான் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அல்ல! அவர்கள் மூலம் தன்னை உண்மைப்படுத்தி வைப்பதன் மூலம் ஹளறத் கதீஜா றழியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு நபிகளாரின் நுபுவ்வத்தில் முழுமையான உறுதி - யகீன்- ஏற்பட வேண்டும் அத்தோடு ஏனையவர்களுக்கும் உறுதி வரவேண்டும் என்பதற்காகும், எவ்வாறெனில், கற்கள் மூலம் கலிமாச்சொல்லவைத்தது, மரங்கள் சாட்சி பகர வைத்தது, தன்னுடைய அறிவுக்காக அல்ல! அடுத்தவர்களுக்குத் தெரியப்படுத்துவதற்காகும்.

### குற்றச்சாட்டு : 15

நூறை விட - பஷர் - மனிதர் மேலானவர், பாருங்கள் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் மனிதர் , நூரிகளான மலக்குகள் அன்னாருக்கு ஸஜதாச் செய்தனர், இன்னும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் மிஃறாஜில் மனிதராக இருந்து கொண்டு அர்ஷையும் தாண்டி இடமேயில்லாத வெட்டவெளாயில் சஞ்சாரம் செய்தார்கள், ஒளிமயமான ஹளறத் ஜிப்ரீயீல் அலைஹிஸ்ஸலாம் ஸித்றத்துல் முன்தஹாவோடு தனது பயணத்தை நிறுத்திக் கொண்டார்கள், ஆகவே, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்பது அன்னாரின் தகுதியைக் குறைத்து மதிப்பிடுவதாகவே அமையும்.

பதில்: முதலில் மனிதர் - பஷர்- பொதுவாக நூறை விட மேல் என்ற இந்த கோட்பாட தவறாகும், சாதாரணமான நீங்களும், அபூஜஹ்லும் இன்னும்,

இவர்களல்லாத ஏனையவர்களும் கூட மலக்குகளை விட மைலானவர்கள் என்று கூற வேண்டிவரும்,

இரண்டாவதாக, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பஷரியத்தை முற்று முழுதாக நாம் மறுத்தால்தான் இந்த குற்றச்சாட்டு வரும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பஷறும்தான், நூறும்தான் தனியான பஷர், இன்னும் தனியான நூறை விட தன்னில் நூறாகவும், பஷறாகவுமிருப்பவர் அனைவரையும் விட மேலாகும் .

اولئك هم شر البرية

காபிர்கள் படைப்பில் கெட்டவர்கள் என்று அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.



குறிப்பு:
இதுவரை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நூறும்தான், மனிதரும்தான் என்பதற்கான தக்க நியாயங்கள் ஆதாரங்களுடன் முன்வைக்கப்பட்டன, இதில் சொல்லப்பட்ட அனைத்து குற்றச்சாட்டுக்களும் தேவ்பந்தி வஹாபிகளால் அவரவர்களின் நூற்களில் முன்வைக்கப்பட்டவையாகும், இத்துடன் மூல நூலாசிரியரின் நூர் பற்றிய விளக்கம் இனிதே நிறைவு பெறுகின்றது, அல்ஹம்துலில்லாஹ்! முற்றும் .

# நபிகள் நாயகத்தின் திரு மேனிக்கு நிழல் இல்லை!

அந்நூறுல் முஹம்மதியின் இரகசியங்கள் 15

அத்தியாயம் : 2

நபிகள் நாயகத்தின் திரு மேனிக்கு நிழல் இல்லை!

அல்லாஹுத்த ஆலா தனது ஹபீப் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு உலகத்தில் நூற்றுக்கணக்கான முஃஜிஸாத்துக்களை வழங்கியதில் அண்ணலம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனிக்கு நிழல் இல்லாதிருப்பதும் ஒன்றாகும், சூரியன், சந்திரன், விளக்கு உள்ளிட்டவையின் வெளிச்சத்தில் அன்னாரின் பரிசுத்தமான திருமேனிக்கு நிழல் விழுவதில்லை, எனினும் அண்ணலார் அணிந்திருக்கும் ஆடைக்கும் கூட நிழல் விழுவதில்லை.

இது தொடர்பாக திருமறை வசனங்கள், ஸஹீஹான ஹதீதுகள், புகஹாக்களின் கூற்றுக்கள், குறிப்பாக தேவ்பந்தி வஹாபிகளின் கூற்றுக்களும் ஆதாரங்களாகவும் சாட்சியங்களாகவுமிருக்கின்றன.

நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனிக்கு நிழல் இல்லையென்பதற்குரிய திருமறை வசனங்களின் சான்றுகள்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

لقد جاءكم من الله نور وكتاب مبين

1-மனிதர்களே! அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உங்களிடம் ஒளியும் தெளிவான வேதமும் வந்துள்ளது.

2- يا ايها النبي انا ارسلناك شاهدا ومبشرا ونذيرا وداعيا الي الله باذنه سراجا منيرا

நபியே ! உம்மை நாம் சாட்சி பகர்பவராகவும், நற்செய்தி கூறுபவராகவும், எச்சரிப்பவராகவும், அல்லாஹ்வின் தரப்பில் அவனுடைய கட்டளைப்படி

அழைப்பவராகவும், இன்னும் பிரகாசிக்கும் சூரியனாகவும் அனுப்பி வைத்துள்ளோம்.

3- مثل نوره كمشكوة فيها مصباح المصباح في الزجاجة

அல்லாஹ் (அல்லது முஹம்மது முஸ்தபா)வின் ஒளிக்கு உதாரணம் மாடத்தைப்போன்றுள்ளது, அதில் சிமிளியில் விளக்கு இருக்கின்றது.

அல்லாஹுத்த ஆலா முதல் திருவசனத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நூர் என்று கூறுகின்றான், இரண்டாவது திருவசனத்தில் சூரியன் என்கின்றான், மூன்றாவது திருவசனத்தில் நபிகளாரின் தாத்தை ஒளியென்றும், அன்னாரின் புனித நெஞ்சை விளக்கின் சிமிளியென்கின்றான், ஒளிக்கும், சூரியனுக்கும், விளக்கின் தெளிவான சிமிளிக்கும் நிழலில்லையென்பது வெளிப்படையானது, இத்திருவசனங்கள் மூலமாக நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருவுடலுக்கு நிழலில்லையென்பது நிரூபணமாயிற்று!

அன்னை அம்மணி ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்கள் மீது சிலர் அபாண்டம் கற்பித்த போது , றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் சில ஸஹாபாக்களிடம் இது தொடர்பாக ஆலோசனை கேட்டார்கள், அது சமயம் துன்னூறைன் ஹளறத் உதுமானிப்னு அப்பான் றழியல்லாஹு அன்ஹு நபிகளாரின் சன்னிதானத்தில் இவ்வாறு கட்டியம் கூறினார்கள்.

وقال عثمان رضي الله عنه ما وقع ظلك علي الارض لئلا يقع انسان قدمه علي ذلك الظل فلما لم يكن احد من وضع القدم علي ظلك كيف يمكن احد من تلويث عرض زوجتك

تفسير مدارك تحت اية لولا اذ سمعتموه

ஹளறத் உதுமான் றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள்,

அல்லாஹ்வின் திருத்தூதரே! தாங்களின் நிழலில் மக்கள் கால் பதிக்கக்கூடாதென்பதற்காக தங்களுக்கு நிழலையே அல்லாஹுத்த ஆலா இல்லாமலாக்கினான், அப்படியிருக்க தங்களின் மனைவியின் விடயத்தில் கறைபடுத்த எப்படி இடமளிப்பான்?

ஆதாரம் : தப்ஸீர் மதாரிக்

ஹளறத் அமீறுல் முஃமினீன் , கலீபத்துல் முஸ்லிமீன் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள்.

ان عمر رضي الله عنه قال رسول الله صلى الله عليه و سلم انا قاطع بكذب المنافقين  لان الله عصمك من وقوع الذباب علي جلدك لانه يقع علي النجاسات فيتلطخ بها فلما عصمك ذلك القدر من القذر فكيف لا يعصمك من صحبة من تكون متلطخة يمشي هذه الفاحشة

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள்,

முனாபிக்குகள் பொய்யர்கள் என்பதில் எங்களுக்கு மாற்றுக்கருத்து கிடையாது, ஏனெனில், கொசுக்கள் நஜீஸில் விழுந்து மொய்ப்பதால் தங்களின் புனித திருமேனியில் கொசு படுவதை விட்டும் அல்லாஹுத்த ஆலா பாதுகாத்துள்ளான், இவ்வாறான அசிங்கமான ஊத்தைகளிலிலிருந்து தங்களைப்பாதுகாத்த அல்லாஹுத்த ஆலா இவ்வாறான மானக்கேடானதியிலிருந்து தங்களின் மனைவியை ஏன் பாதுகாக்கமாட்டான்.

ஹளறத் உதுமானுல் ஙனி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்றிலிருந்து றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஜோதியான புனித திருமேனிக்கு நிழல் கிடையாது என்பது தெளிவாகத் தெரிகின்றது, ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்றிலிருந்து அன்னாரின் திருமேனியில் ஈ உட்காருவதில்லை என்று தெரிகின்றது , ஜோதியான திருவுடலுக்கு நிழலில்லாதிருப்பதும் முஃஜிஸாவாகும், இன்னும், பரிசுத்தமான புனித மேனியில் ஈ உட்காராதிருப்பதும் முஃஜிஸாவாகும்.

ஹகீம் திர்மிதி அவர்கள் தங்களின் " நவாதிறுல் உஸூல் என்ற நூலில் ஹளறத் தக்வான் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலம் அறிவிக்கின்றார்கள்.

عن ذك ان  ان رسول الله صلى الله عليه و سلم  لم يكن يراله ظل في الشمس ولا قمر

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு சூரிய சந்திர வெளிச்சத்தில் நிழல் விழுவதில்லை .

ஸெய்யிதுனா அப்துல்லாஹ் இப்னு முபாறக், ஹாபிழ் அல்லாமா இப்னு ஜௌஸி , உள்ளிட்டோர் ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களைத் தொட்டும் அறிவிக்கின்றார்கள்.

قال لم يكن لرسول الله صلي الله عليه و سلم ظل  ولم يقم مع. الشمس الا غلبه ضرئه ضوئها  ولا مع السراج الاضرئه ضوئه

ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள் .

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழலில்லை, இன்னும், சூரியனுக்கு முன்னால் நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எழுந்து நின்றால், அன்னாரின் ஒளி சூரிய ஒளியை மிகைத்து காணப்படும், இன்னும், விளக்கிற்கு முன் அன்னார் எழுந்து நின்றால் அன்னாரின் பிரகாசம் விளக்கின் வெளிச்சத்தை மங்கவைத்துவிடும்.

பைஹகி ஷரீபில் ஹளறத் அப்துல்லாஹ் இப்னு முஅய்கப் றழியல்லாஹு அன்ஹு மூலம் பதிவு செய்யப்பட்டுள்ளது

قال حججت حجة الوداع فدخلت دارا بمكة فرأيت فيها رسول الله صلى الله عليه و سلم وجهه كدائرة القمر

கூறுகின்றார், நான் ஹஜ்ஜத்துல் விதாவில் கலந்து கொண்ட போது மக்காவில் ஒரு வீட்டுக்குள் நுழைந்தேன், அங்கே அண்ணலம் பெருமானார் றஸூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கண்டேன், அன்னாரின் சந்திர வதனம் நிலவின் துண்டு போன்று இலங்கிக் கொண்டிருந்தது.

இமாம் ஜலாலுத்தீன் சுயூத்தி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி தங்களின் கஸாயிஸுல் குப்றா என்ற நூலில் மேலே கூறப்பட்ட ஹளறத் தக்வான் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் அறிவிப்புத் தொடர்பாக ஒரு பாடத்தை நிறுவியுள்ளார்கள் , அதே பாடத்தில் கூறுகின்றார்கள்,

قال ابن سميع من فضائله صلي الله عليه و سلم ان ظله كان لا يقع علي الارض وانه كان نورا فكان اذا مشي في الشمس او القمر لا ينظر له ظل

இப்னு ஸமீஃ கூறுகின்றார்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தனித்துவங்களில் அன்னாரின் நிழல் நிலத்தில் பாடாதிருப்பதும் ஒன்றாகும், அன்னார் எப்பொழுதாவது சூரிய வெளிச்சத்தில், அல்லது நிலா வெளிச்சத்தில் சென்றால், அன்னாருக்கு நிழலைக் காணமுடிவதில்லை.

அல்பௌஸஜுல் லபீப் பீ கஸாயிஸி ஹபீப் என்ற சங்கையான நூலில் பாடம் 2 பிரிவு 4ல் கூறுகின்றார்கள்,

لم يقع ظله علي الارض

ولا رؤي له ظل في الشمس ولا قمر

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் நிலத்தில் விழுவதில்லை, அன்னாரின் நிழலை சூரிய வெளிச்சத்திலோ, சந்திர ஒளியிலோ காணப்படுவதில்ல.

ஹளறத் காழி இயாழ் றஹ்மத்துள்ளாஹிஅலைஹி தங்களின் ஷிபா ஷரீபில்

கூறுகின்றார்கள்.

وما ذكر من انه لا ظل لشخصه في شخص ولا قمر لانه كان نورا

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு சூரிய வெப்பத்திலோ, நிலா வெளிச்சத்திலோ நிழல் கிடையாது என்று கூறப்படுகின்றது , ஏனெனில் , அன்னார் ஒளியாக இருந்தார்கள்.

ஹளறத் இமாம் கபாஜி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி இதன் விரிவுரையான நஸீமுர்றியாழில் எழுதுகின்றார்கள்.

ومن دلائل نبوته صلي الله عليه و سلم ما ذكر من انه لا ظل لشخصه اي جسده الشريف اللطيف اذا كان في الشمس او القمر لانه صلي الله عليه و سلم كان نورا والانوار شفافة لطيفة لا تحجيب غيرها والا الانوار لا ظل بها كما تشاهد في انوار الحقيقة وهذا رواه صاحب الوفاء عن الن عباس قال لم يكن لرسول الله صلي الله عليه و سلم ظل ولم يقم مع شمس الا غلب ضوئه ضوئها ولا مع السراج الا غلب ضوءه ضوءه وقد تقدم هذا والكلام فيه وقد نطق القرأن بانه النور المبين وكونه بشرا لا ينافيه كما توهم فان فهمت فهو نور علي نور فان النور هو الظاهر بنفسه المظهر بعده وتفصيل في المشكوة الانوار ملخصا .

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நுபுவத்திற்கான ஆதாரங்களில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சூரிய வெளிச்சத்தில் அல்லது, நிலா ஒளியில் இருக்கும்போது ஐதான அன்னாரின் திருமேனிக்கு நிழலில்லாதிருப்பதும் ஒன்று! ஏனெனில் அன்னார் நூறாகும், ஒளிகள் ஐதானதும், மிகத்தெளிவானதுமாகும், எதற்கும் தடையாக அமைவதில்லை, ஒளிக்கு நிழல் விழுவதில்லை, இதை எதார்த்தமான ஒளியில் பார்க்கவே செய்கின்றோம்.

வபாஉல்வபா என்ற நூலாசிரியர் ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமாவைத் தொட்டும் அறிவிக்கின்றார்கள்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் இல்லை , அன்னார் சூரிய வெப்பத்தில், அல்லது விளக்கிற்கு முன் நின்றால், அன்னாரின் பிரகாசம் அவற்றின் பிரகாசத்தை மிகைத்து நிற்கும் என்று ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள்.

அன்னார் பகிரங்கமான நூர் என்று திருக்குர்ஆன் கூறுகின்றது, சிலர் (தவறாக ) ஊகிப்பது போன்று நூர் பஷரியத்திற்கு எதிரானதில்லை,

நீர் நன்கு புரிந்து கொண்டால், அன்னார் நூறுன் அலா நூர் ஒளிக்கு மேல் ஒளியாகும், ஏனெனில், ஒளியென்பது, தானும் வெளியாகி, அடுத்ததையும் வெளியாக்கக்கூடியதாகும், இதற்கான விரிவான விளக்கம் இமாம் ஙஸ்ஸாலி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி அவர்களின் மிஷ்க்காத்துல் அன்வார் என்ற நூலில் காணலாம்..

## அந்நூறுல் முஹம்மதியின் இரகசியங்கள் ( 16 )

**ஹளறத் மௌலவி ஜலாலுத்தீன் றூமி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் தங்களின் மஸ்னவி ஷரீபில் கூறுகின்றார்கள்.**

چوں فناشی از فقر پیرا یہ بود

ا و محمد دار بے سایہ بود

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தாத்தில் சூனியமான ஒரு காதலனும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிஇ வஸல்லமவர்களைப்போன்று நிழலில்லாதவனாகிவிடுவான்.**

**ஹளறத் மௌலானா அப்துல் அலி பஹ்றுல் உலூம் மஸ்னவியின் விரிவுரையில் மேற்கண்ட கன்னிக்கான விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.**

**இரண்டாவது கன்னியில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் இல்லை என்ற அன்னாரின் முஃஜிஸா வைப்பற்றி சாடைகாட்டப்பட்டுள்ளது.**

**இமாம் அஹ்மத் இப்னு கதீப் கஸ்தலானி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி மவாஹிபுல்லதுன்னியாவில் கூறுகின்றார்கள்.**

لم يكن له صلى الله عليه وسلم ظل في الشمس ولا في قمري رواه الترمذي عن ذكوان

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு சூரிய வெப்பத்திலோ, சந்திர ஒளியிலோ நிழல் விழுவதில்லை, இவ்வாறு திர்மிதி ஷரீபில் தக்வான் றழியல்லாஹு அன்ஹு அவர்களைத்த தொட்டும் அறிவிக்கப்பட்டுள்ளது.**

**அல்லாமா ஹுஸைன் இப்னு முஹம்மத் க வஹார் பக்ரி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி தங்களுடைய**

الخمسين في احوال النفس النفيس

**என்ற நூலில் குறிப்பிடுகின்றார்கள்.**

لم يقطع ظله على الارض ولا رؤي له ظل في شمس ولا في قمر

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிலத்தில் நிழல் படுவதில்லை, இன்னும், அன்னாருக்கு சூரிய வெளிச்சத்திலோ, சந்திர ஒளியிலோ நிழல் காணப்படுவதுமில்லை.

نور الابصار في مناقب ال نبي. الاطهار

என்ற நூலில் கூறுகின்றார்கள்

لم يقطع ظله على الارض ولا رؤي له ظل في شمس ولا في قمر

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிலத்தில் நிழல் விழுவதில்லை, இன்னும், அன்னாருக்கு சூரிய வெளிச்சத்திலோ, சந்திர ஒளியிலோ நிழல் காணப்படுவதுமில்லை.

இமாம் இப்னு ஹஜர் மக்கி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின்افضل القري என்ற நூலில் கூறுகின்றார்கள்.

ومما يؤيد انه صلى الله عليه وسلم صار نورا اذ كان اذا مشى في الشمس والقمر لا يظهر له ظل لانه لا يظهر له ظل لانه لا يظهر الا بكثب وهو صلى الله عليه وسلم قد خلصه الله من سائر الكثافات الجسمانية وصيره نورا صرفا لا يظهر له ظل اصلا

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நூர் என்பதை உறுதிப்படுத்தும் ஆதாரங்களில் இதுவும் ஒன்று! அதாவது, அண்ணாருக்கு சூரிய வெளிச்சத்திலோ, சந்திர ஒளிலோ, செல்லும்போது நிழல் வெழியாகுவதில்லை ஏனெனில் கனதியான பொருளில் தான் நிழல் விழும் ,அல்லாஹ் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை சடத்துவமான கனதிகளிலிருந்து பரிசுத்தமாக்கி யுள்ளான், அன்னாரைப் பரிசுத்தமான நூறாகவும் ஆக்கியுள்ளான், ஆகவே, அன்னாருக்கு நிழல் அறவே வெளியாகுவதில்லை.

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி கத்த ஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தங்களுடைய மதாரிஜுன் நுபுவ்வத் என்ற நூலில் கூறுகின்றார்கள்.

حضور صلی اللہ علیہ وسلم کا سایہ نہ تہا نہ دوپ میں نہ چاندنی میں حکیم ترمدینے حضرت ذکوان سے روایت کیا

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு சூரிய வெப்பத்திலோ, சந்திர ஒளியிலோ நிழல் விழுவதில்லை, இவ்வாறு திர்மிதி ஷரீபில் ஹளறத்

தக்வான் றழியல்லாஹு அன்ஹு அவர்களைத்த தொட்டும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹளறத் முஜத்தித் அல்பதானி குத்புர் ரப்பானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தங்களின் மக்தூபாத் ஷரீஃப் பாகம் 3 இலக்கம் 100 ல் எழுதுகின்றார்கள்.

نبی صلی اللہ علیہ وسلم کا سایہ نہ تھا عالم شہادت میں ہر جسم کا سایہ جسم سے زیادہ لطیف ہوتا ہے جب حضور صلی اللہ علیہ وسلم سے لطیف دنیا میں کوئی چیز نہیں تو اپ کے سایہ کی کیا صورت ہو سکتی ہے

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் இல்லை, சட உலகில் ஒவ்வொரு சடத்துக்குமான நிழல் சடத்தை விட அதிகம் நுட்பமானவையாக இருக்கும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களில் நுட்பமான எந்த ஒரு பொருளும் உலகத்தில் கிடையாதெனில், அன்னாருக்கு நிழல் வருவதற்கு என்ன நிலை இருக்கின்றது?

ஹளறத் ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்தித் திஹ்லவி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தங்களுடைய தப்ஸீர் அஸீஸியில் சூறத்துல் ழுஹா வின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

حضور کا سایہ زمین پر نہ پڑتا تھا

நபியவர்களுக்கு நிலத்தில் நிழல் விழுவதில்லை.

மஜ்ம உல் பிஹார் ஷறஹுஷ்ஷிபா என்ற நூலில் எழுதுகின்றார்கள்.

من اسمائه صلى الله عليه وسلم النور قيل من خصائصه صلى الله عليه وسلم انه اذا مشى في الشمس والقمر لا يظهر له ظل

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருநாமங்களில் நூர் என்பதும் ஒன்று! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வெயிலிலோ , சந்திர வெளிச்சத்திலோ நடந்து சென்றால் அன்னாருக்கு நிழல் வெளிபடுவதில்லை என்பது அன்னாரின் தனித்துவங்களில் உள்ளது என்றும் கூறப்படுகிறது.

அல்லாமா ஸுப்ஹான் ஹம்லி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி ஹம்ஸியாவின் விரிவுரை புதூஹாத் அஹ்மதியாவில் எழுதுகின்றார்கள்.

لم يكن له صلى الله عليه وسلم ظل ما يظهر في الشمس ولا قمري

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வெயிலிலோ, சந்திர வெளிச்சத்திலோ நிழல் விழுவதில்லை.

ஜவாஹிறுல் பிஹார் என்ற நூல் பாகம் 1 பக்கம் 453ல் அல்லாமா யூஸுபுன் நப்ஹானி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி கூறுகின்றார்கள்.

وكان اذا مشى في قمر او شمس لا يظهر له ذل

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வெயிலிலோ, அல்லது சந்திரனின் வெளிச்சத்திலோ நடந்து சென்றால் ,அன்னாருக்கு நிழல் வெளிப்படுவதில்லை.

மேற்கண்ட ஹதீதுகள், உலமாக்களின் கூற்றுக்களிலிருந்து ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித திருமேனிக்கு வெயிலிலொ ,சந்திர ஒளியிலொ, விளக்கின் வெளிச்சத்திலொ நிழல் ஒருபோதும் விழுவில்லை என்பது நிரூபணமாகி விட்டது

அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் ( 17)

## உறுதிப்படுத்தும் தேவ்பந்தி வஹாபிகளின் கூற்றுக்கள்

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனிக்கு நிழலில்லையென்பதை தேவ்பந்து உலமாக்கள், மற்றும் இமாம்களைப் பின்பற்ற மறுக்கும் வஹாபிகளும் ஏற்றுக்கொள்கின்றார்கள், இதுபற்றிய வலுவான சான்றுகளை இவர்கள் முன்வைக்கின்றனர், ஆனால், தற்கால தேவ்பந்திகள் தங்களின் பெரிய பெரிய தலைவர்களின் கூற்றுக்களையே ஏற்றுக்கொள்ளாமல் ஏன்தான் புரளிபண்ணுகிறார்களோ தெரியவில்லை,

பிடிவாதத்தைக் கைவிட்டு உண்மையை ஏற்றுக்கொள்ளும் பாக்கியத்தை அவர்களுக்கு றப்புத்த ஆலா வதௌபீக் செய்வானாக!

தேவ்பந்து உலமாக்களின் கூற்றுக்களை இப்போது கவனியுங்கள்! தேவ்பந்தின் குருபீடம் மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி தனது " இம்தாதுஸ்ஸுலூக்" என்ற நூல் பக்கம் 86ல் எழுதுகின்றார்.

بتوا تر کے ان حضرت صلی اللہ علیہ وسلم سایہ نے استند و ظاہر است کہ جر نور ہمیں اجسام یہ دارند

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழலில்லை எனபது பலவழிகளில் பரவலாக முதவாதிராக நிரூபணமான விடயமாகும், நூறல்லாத அனைத்திற்கும் நிழல் உண்டு என்பது வெளிப்படையானதுதான்.

நண்பர்களே! இதுதான் மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹியின் அகீதா!, இவர்தான் தேவ்பந்திகளின் குத்பும், வழிகாட்டும் பெரும் நாயகருமாவார், இவர் கூற்றை ஏற்கவில்லையென்றால், வேறு எவர்தான் இருக்கின்றார்,? என்னதான் கூற இருக்கின்றது.?

நைறு முகல்லிதுகளின் நிகரில்லாத ஆலிம் ஹாபிழ் முஹம்மத் ஸாஹிப் லக்னவி தனது தப்ஸீர் முஹம்மதியில் பக்கம் 429ல் எழுதுகின்றார்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிலத்தில் நிழல் படிவதில்லை

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழலில்லை என்பதுதான் நைறு முகல்லிது வஹாபிகளின் பெரிய ஆலிம் ஹாபிழ் முஹம்மத் ஸாஹிப் லக்னவியின் அகீதாவாகும்,

## பகுத்தறிவு சான்றுகள்

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஐதான திரு மேனிக்கு நிழல் இல்லையென்பதை புத்தியும் ஏற்கவே செய்கின்றது, ஏனெனில், நிழலை உணரமுடியாத சில சடப்பொருட்களும் இருக்கின்றன,

அச்சடப்பொருளில் பிரகாசிக்கும் பளபளப்பை குத்றத் அமைத்திருக்கிறது, அல்லது அது பொளிஸாக இருக்கும்.

பாருங்கள், சந்திரனும், கதிரவனும் உணரக்கூடிய சடத்துவமானவை,ஆயினும் அதற்கு நிழலில்லை, காரணம், அதில் நூர் பிரதிபலிக்கிறது, சந்திரன் தன்னில் இருட்டானது, சூரியனின் கதிர்களால் ஒளியை வெளிப்படுத்துகின்றது. தற்செயலான நூறானியத்தின் காரணத்தால் அதற்கு நிழலில்லை, மிகத்தெளிவான கண்ணாடிக்கு நிழல் விழுவதில்லை, இதை பல முறை பார்த்துள்ளோம், கண்ணாடி நூறல்ல, அதன்தெளிவின் காரணமாக அதற்கே நிழல் விழுவதில்லை,

சில கட்டங்களில் அடர்த்தியான சடப்பொருளுக்கும் நிழல் விழுவதில்லை, நான்கு பக்கத்திலிருந்தும் வெளிச்சம் பாய்ச்சப்பட்டால் , அல்லது , எவராவது

**ஒருவர் மின் வெளிச்சத்திற்குக் கீழே நின்றால், நிழல் விழாது , ஏனெனில் நூர் அவரை சூழ்ந்துள்ளது,அதிக வெப்பமான வேளை சூரியன் உச்சியிலிருக்கும் போது மனித ஊடலுக்கும், ஏன் எந்த ஒரு சடப்பொருளுக்கும் நிழல் விழுவதில்லை, காரணம் சூரிய வெளிச்சம் உடலின் ஒவ்வொரு பாகத்திலும் படுகின்றது,**

**அதிக வெளிச்சமுள்ள மின்சார குமுழி தன்னிலே வெளிச்சமாக உள்ளது, இன்னும், இதற்கு மேல் இதைவிட கூர்மையான மின்குமுழியை எரியவிட்டால் ஒளிக்குமேல் ஒளியாகுமேதவிர, அங்கே நிழல்விழுவதற்கான பேச்சே இருக்காது,**

**வெளிப்படையான சடப்பொருளின் தற்செயல் நூறின் காரணத்தால் , நிழல் இல்லையென்றால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களை றப்புத்த ஆலா ஒளியுள்ள திருவுடலைக்கொண்டவர்களாக ஆக்கியுள்ளான், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் கூட தன்னை நூறாக ஆக்குமாறு துஆக்கேட்டுள்ளார்கள், றப்புத்த ஆலாவும் திருக்குர்ஆனில் அந்நூர் அத்தியாயத்தில் அன்னாரை நூறுன் அலா நூர் என்று கூறியுள்ளான், இப்படியிருக்க அன்னாரின் திருமேனிக்கு நிழலில்லாமலிருப்பதில் என்ன ஆச்சரியமிருக்கிறது? மேற்கண்ட அனைத்து சடப்பொருளுக்கும் நிழலில்லையென்பதை ஏற்பவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழலில்லையென்பதை ஏன் நிராகரிக்கின்றனர்?**

**அந்நூறுல் முகம்மதியின் இரகசியம் ( 18)**

**பிரிவு : 2**

# குற்றச்சாட்டுகளும், பதில்களும்

**நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமேனிக்கு நிழல் இல்லை என்பதற்கு எதிரான குற்றச்சாட்டுக்களில் வலுவான குற்றச்சாட்டு எதுவும் இல்லை , சில இரண்டு, மூன்று குற்றச்சாட்டுகளை பல இடங்களிலும் மாற்றி மாற்றி கூறிக் கொண்டு திரிகின்றனர், அவர்களின் குற்றச்சாட்டுக்களையும் ,நமது பதில்களையும் இதோ கூறுகின்றோம்.**

**ரப்புத்தாலா கூறுகின்றான்.**

**குற்றச்சாட்டு : 1**

**பீவி ஸபியா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் அறிவிப்பில் இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் ரஹ்மத்துல்லாஹி அலைஹி முஸ்னதில் பதிவு**

செய்துள்ளார்கள்.

قالت بينما انا يوما بالنصف النهار واذا انا بظل رسول الله صلى الله عليه وسلم

ஒரு தினம் பகலில் உச்சி நேரம் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வருகை தந்தார்கள், அப்போது நான் நபியவர்களின் நிழலில் நின்றேன் என்று கூறுகின்றார்கள்.

நான் ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நிழலில் இருந்தேன் என்று ஹளரத் ஸபியா ரலியல்லாஹு தஆலா அன்ஹா கூறுவதை கவனியுங்கள்! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழலில்லையென்றால், நபயவர்களின் நிழலில் எவ்வாறு இருந்திருக்க முடியும்? இந்த ஹதீதில் ழ்ஞ் என்ற வார்த்தையைக் கவனியுங்கள்! ழ்ஞ் என்றால் நிழலுக்கு கூறப்படும்.

குறிப்பு: ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் உண்டு என்று நிரூபிப்பதற்கு எந்த ஒரு தேவபந்திக்கும் இந்த ஹதீதை தவிர்த்து வேறு ஹதீது கிடைக்கவில்லை, ஆகவே தான் இதனை பெருமையோடு முன்வைக்கின்றனர்.

பதில்: இந்த ஹதீதில் கூறப்படும் நிழல் என்பது, பொதுவாக சொல்லப்படுகின்ற அடர்த்தியான சடப் பொருளுக்கு விழுகின்ற நிழல் அல்ல! ஏனெனில், மதீனத்துல் முனவ்வறாவில் வெப்பமான காலத்தில் உச்சியில் நிழல் விழுவதில்லை, அடுத்த மனிதர் கடந்து செல்லும் அளவுக்கு உச்சியில் ஒரு மனிதருக்கு நிழல் விழுவதுமில்லை, வெயில் காலத்தில் உச்சி வெயியில் நமக்கு கூட பெரிதாக நிழல் இருப்பதுமில்லை ,ஆகவே, இங்கு நிழல் என்பதன் பொருள் வேறு அர்த்தம் கொண்டதாகும்.

அரபு மொழியிலும் சரி ,உருது மொழியிலும் சரி ரஹமத்,தயவு, கொடை, அபயம் உள்ளிட்ட வைக்கும் நிழல் என்று கூறுவார்கள், பொதுவாகவே பெரியோர்கள் எழுதுகின்ற பொழுது. ضلهم ماد அவர்களின் நிழல் எப்பொழுதும் நிலைத்திருக்கட்டுமாக!

அல்லது ضلهم مد அவர்களின் நிழல் நீளமாக இருக்கட்டும்! என்று கூறுவது வழக்கம், இதன் பொருள், அவர்களின் தயவும், ரஹ்மத்தும், அபயமும் நிரந்தரமாக இருக்கட்டும் என்பதாகும்.

ஹதீது ஷரீபில் வருகிறது ,

السلطان العادل المتواضع ظل لله

جامعة صغير جلد 2 ص 31

பணிவான, நீதியான சுல்தான் அல்லாஹ்வின் நிழலாகும்.

ஜாமிஉஸ்ஸகீர், பா:2 பக்31

மேலும் ஹதீது ஷரீபில் வருகிறது,

سبعة يظلهم الله تحت عرشه

ஏழு மனிதர்கள் இருக்கிறார்கள், அல்லாஹுத்தஆலா அவர்களை தன்னுடைய அர்ஷின் நிழலிலே இருப்பாட்டுகின்றான்.

பாருங்கள்!

நிழல் விழும் அளவுக்குஅல்லாஹுத்தஆலா அடர்த்தியான சடப்பொருள் அல்ல! மகத்தான அரஷும் நிழல் விழக்கூடிய சடப் பொருள் அல்ல! இங்கு இவ்விரண்டுக்கும் நிழல் இருக்கிறது என்பதன் பொருள் ரஹமத் ,,அபயமாகும் .

மேலும் ஹதீது ஷரீபில் வருகிறது.

ان في الجنة شجرة تسير الراكب في ظلها مئة عام لا يعظها

சொர்க்கத்தில் ஒரு மரம் உண்டு! அந்த மரத்தின் நிழலில் ஒரு பிரயாணி நூறு ஆண்டுகள் சென்றும் அதைக் கடக்க முடியாது.

பாருங்கள்! சொர்க்கத்தில் வெயிலுமில்லை, சூரிய, சந்திர ஒளியுமில்லை, அப்படியாயின், "தூபா" என்ற மரத்தின் நிழலுக்கான பொருள் என்ன? இங்கும் நிழல் என்பதன் பொருள் ,அபயம் அல்லது அதற்கு கீழே நிற்பதாகும்.

குற்றச்சாட்டில் முன்வைக்கப்பட்ட ஹதீதின் பொருளில் உள்ள நிழல் என்பது, நமக்குத் தெரிந்த பொதுவான நிழலாக இருக்குமாயிருந்தால், இது ஹளரத் தக்வான் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் ஹதீதுக்கு மாற்றமானதாக அமையும் ,அத்தோடு நாம் முன்வைத்த திருக்குர்ஆன் வசனங்களுக்கும் எதிராக அமையும்.

குற்றச்சாட்டு :2

திருக்குர்ஆனில் அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

يتفيأ ظلاله عن اليمين وعن الشمال

அவனுடைய படைப்பின் நிழல் காலையிலும், மாலையிலும் சாய்ந்து கொண்டிருக்கிறது. 16: 48

ஒவ்வொரு பொருளின் நிழலும் கூட அல்லாஹ்வுக்கு சஜதாச் செய்வதாக இத் திருவசனத்திலிருந்து விளங்க முடிகிறது, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் இல்லையென்றால், ஏனைய படைப்புகளுக்கு முன்னால் நபியவர்கள் குறைந்த வணக்கசாலிகளாகி விடுவார்களே! ஏனைய படைப்புகளுக்கு இரண்டு சஜதாக்கள், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஒரு சஜதாவாகுமே! ஆகவே, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழல் இருக்கிறது, அன்னாரின் இபாதத் இரண்டு விதத்திலும் அமைந்து விடுகிறது.

பதில்: குற்றச்சாட்டுக்கு இரண்டு விதமான பதில்கள் இருக்கின்றன,

1- மடக்கிப் பிடிக்கும் பதில். (إلزامي)

2- திட்டவட்டமான பதில் (تحقيق)

பதில்-1 ஒரு தேவ்பந்தி ஸாஹிப் நிழலில் தொழு கிறார், தேவ்பந்தி மௌலவி நிழல் விழாத இடத்தில் தொழுகிறார், பகலில் வெயிலில் ஒரு மிருகம் நிற்கிறது , அதற்கு நிழல் விழுகிறது என்று வைத்துக்கொண்டால், அந்த மிருகம் உங்கள் கூற்றுப்படி தேவ்பந்தி மௌலவியைவிட மேலாகிவிடும்,, மௌலவி சாஹிப் நிழல் இல்லாத இடத்தில் ஸஜதாச்செய்கிறார், மிருகம் வெயிலில் இருக்கிறது அதற்கு நிழலும் இருக்கிறது, இது தொடர்பாக உங்களின் பதிலைப் பொறுத்தே நமது பதிலும் அமையும்..

பதில்:2 ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒரு சஜதா உலகத்தில் உள்ளவர்களின் முழு ஆயுளிலும் செய்கின்ற இபாதத்துகளை விட மேலானதாகும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒரு சஹாபியின் ஒரு கொத்து தானியத்தின் தர்மம், எமது மலையளவு தங்கத்தைத் தர்மம் செய்வதை விட மேலானதாகும், அப்படியாயின்,நபியவர்களின் இபாதத்தைப் பற்றி கேட்கவும் வேண்டுமா? நிழல் உள்ள எந்த பொருளாக இருந்தாலும் சரி நிழல் இல்லாத பொருளாயினும் சரி, நபியவர்களின் தகுதிக்கு நெருங்கவே முடியாது!

மௌலவி சாகிப்!

எதிர்காலத்தில் நீங்களும் உங்களுடைய ஜமாத்தினர்களும் வெயிலிலேயே தொழுது கொண்டே இருங்கள், அப்போது உங்களுடைய சஜதாவும், உங்களின் நிழலின் சஜதாவும் சேர்ந்து உங்களுக்கு கிடைக்கும்.

**குற்றச்சாட்டு: 3**

ரப்புத்தஆலா திருக்குர்ஆனிலே கூறுகிறான்.

قل انما انا بشر مثلكم

கூறுவீராக! நானும் உங்களைப் போன்ற மனிதர் தான்.

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நம்மைப் போன்ற மனிதர் என்பது திருக்குர்ஆனுடைய தீர்ப்பு ! நாம் நிழலில்லாதவர்களில்லை, நமக்கு நிழலுண்டு, ஆகவே, நபியவர்களுக்கும் நிழல் இருக்க வேண்டும், நிழலில்லாதவரை உங்களைப் போன்றவர் என்று சொல்ல முடியாது.

**பதில்: இந்தக் குற்றச்சாட்டுக்கும் இரண்டு பதில்கள் உள்ளன.**

1- மடக்கிப் பிடிக்கும் பதில் الزامي

2- திட்டவட்டமான பதில் ,تحقيق

1- பின்னர், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நம்மைப் போன்ற மனிதர்தான், நாம் நபி இல்லை, ரசூல் இல்லை, ஷபீஉல் முத்னிபீன் இல்லை, ரஹ்மத்து ன்லில் ஆலமீன் இல்லை, அப்போ ந ஊது பில்லா! ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் நபி இல்லை, ரசூலுல்லாஹ் இல்லை , உயர்ந்த எந்த ஒரு பண்புக்குரியவர்களாகவுமில்லை என்றும் கூறுங்களேன்

بشر مثلكم

உங்களைப் போன்ற மனிதர் என்ற விளக்கத்திலிருந்து நுபுவ்வத் , றஸூல் உள்ளிட்ட ஏனைய பண்புகளுக்கான மறுப்பு உண்டாகிவிட்டது.

**2- திட்டவட்டமான பதில் இதோ!**

இத்திரு வசனத்தில் போன்மை என்பது, ஏனைய அடிமைகளைப் போன்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் அடிமைதான்! இறைவன் அல்ல! அல்லாஹ்வின் பிள்ளைகளும் அல்ல !அல்லாஹ்வின் உறவு

முறை சகோதரனோ அல்ல! அல்லாஹ்வுக்கு சொந்தமான அடியாராகும், அன்னாரில் தெய்வீகத்தின் வாடையே கிடையாது என்பதாகும்.

மறுப்பாளர்களிடத்தில் நபியவர்களுக்கு நிழல் உண்டு என்பதற்கு வலுவான எந்த ஆதாரமும் கிடையாது, பிடிவாதத்தாலும் ,முரண்டாலுமே மறுப்பு தெரிவிக்கின்றனர், ஆகவே தான் கவைக்குதவாத சந்தேகங்களை ஆதாரங்களாக விளங்கிக் கொண்டிருக்கின்றனர்,

நாம் முன்வைத்த இந்த அளவு திருக்குர்ஆன் வசனங்கள், ஹதீதுகள், சன்மார்க்க பெரியோர்களின் கூ ற்றுக்கள், பகுத்தறிவு ஆதாரங்கள் மற்றும் தேவ்பந்து பெரியோர்களின் கூற்றுக்கள் உள்ளிட்டவையை முன் வைத்தோம், நீங்களும் நிழல் உண்டு என்பதற்கு திருக்குர்ஆன் அல்லது ஹதீஸ் அல்லது சஹாபியின் கூற்றுக்களை முன்வையுங்கள்! முன் வைக்க முடியாவிட்டால், ஈருலக இரட்சகர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அல்லாஹ்வின் ஒரு முஃஜிஸாத்தை, சம்பூரணத்தை ஏன் மறுக்கின்றீர்கள்?

கைசேதம்! மாற்று சமுகத்தினர் தங்களின் தலைவர்களின் பொய்யான சிறப்புத்தன்மைகளை துருவித் தேடிக்கொண்டிருக்கும் போது, நீங்கள் தங்களின் திருத்தூதரின் உண்மையான சம்பூரணமான சிறப்புக்களை ஏற்கத் தயாறில்லை? இது போன்று பல இலட்சம் சிறப்பம்சங்களை நபியவர்களுக்கு அல்லாஹுத்த ஆலா வழங்கியுள்ளான், அவற்றில் எதை நீங்கள் பிடித்திருக்கின்றீர்கள்?

நபிகள் கோமானின் சிறப்புக்களைப் பார்க்கும் கண்களை அல்லாஹுத்த ஆலா வழங்குவானாக! ஆமீன்

நண்பர்களே! புறக்கண்கள் சுர்மாவால் கூர்மையடைகிறன, ஆனால், அகக்கண் வொலிமார்களின் வீட்டுப் புழுதியால் வெளிச்சமடைகிறது, ஆகவே, ஏதாவது ஒரு வொலியின் வீட்டின் புழுதியை அகக்கண்ணில் தடவுங்கள்! அகக்கண் கூர்மையடையும், அபூஜஹ்லு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை புறக்கண்ணால்தான் பார்த்தான், காபிரானான், ஹளறத் ஸித்தீக் றழியல்லாஹு அன்ஹு அகக்கண்ணால் பார்த்தார்கள், முஃமின் ஸஹாபியானார்கள்

ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி கூறுகின்றார்கள்.

றஊப் றஹீமாகிய றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழலில்லாதற்கான காரணம், நிழல் சடத்தை விட ஐதானதாகும், சுவர், மரம் உள்ளிட்டவையின் சடம் திண்மமானது, அவற்றின் நிழல் சூக்குமமானது, வையகத்தில் நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனியைவிட ஐதான வேறுபொருள்

**இருக்கவே முடியாது, ஏதாவதொன்று இருக்குமாயின், அன்னார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஐதான பண்பில் குறைவு வரும், ஆனாலும் அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அனைத்து பண்புகளிலும் சம்பூரணத்தின் உச்சியிலுள்ளவர்கள், அன்னாருக்கு சமனாக ஒன்று வருவதை அல்லாஹுத்த ஆலா விரம்பமாட்டான்.**

**நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிழலில்லை என்பதற்கு இத்துணை ஆதாரங்களும், கூற்றுக்களுமுள்ளன, இதை இஜ்மாஃவான மஸ்அலா என்று கூறினாலும் மிகையல்ல! மறுப்பாளர்கள் ஏன் இதை ஏற்க மறுக்கின்றனர் என்பது நமக்கு புரியாத புதிராக இருக்கின்றது, இது ஓர் அந்நிய பேச்சல்ல! நிழலில்லாதிருப்பது அகீதாவில் ஷிர்க் வரக்கூடிய தெய்வீகத்தின் அடையாளமுமல்ல!**

**உலகத்தில் கோடான கோடி பொருட்களுக்கு நிழலில்லாதிருப்பதை ஏற்கின்றனர், அதில் ஏந்தப்பிரச்சினையும் கிடையாது, இங்குமட்டும்தான் தலை சொறிகின்றனர்.**

**அல்லாஹுத்த ஆலா உண்மையை அறிந்தவன்.**

**وصلي الله علي خير خلقه ونور عرشه وزنة عرشه سيدنا ومولانا محمد صلي الله عليه وسلم واله واصحابه وبارك وسلم .**